# OPPORTUNITY
KNOCKS ON YOUR DOOR

# MAKE FRIENDS
AND LET THE NETWORK GROW

# EARN
IN THE COMFORT OF YOUR HOME

You have been an avid reader of Chandamama, and here is a chance to associate yourself with the 54-year-old magazine and make money, too. Chandamama is appointing **SUBSCRIPTION AGENTS** throughout India. If you are above 18 years and love interacting with people, get in touch with us.

HURRY! GRAB THIS OPPORTUNITY!



CHANDAMAMA
INDIA LIMITED

82, Defence Officers' Colony,
Ekkatuthangal,
Chennai - 600 097.
Tele/fax : 234 7384 / 99
E-mail : subscription@chandamama.org

# அம்புலிமாமா

மதிமுகம் : 104 மார்ச் : 2001 புன்னகை : 3



## பொருளடக்கம்



Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai–600 026 on behalf of Chandamama India Limited, No.82, Defence Officers Colony, Ekattuthangal, Chennai - 600 097. Editor: Viswam

### சிறப்புப் படைப்பாக



உதவியும், திருப்தியும்
(வேதாளம் சொல்லும் கதை)

மாயாஜால மலை





இந்தியப் பண்பாடு - வரலாறு

வீர தீர பராக்கிரமன்



நீங்கள்

அயல்நாடுகளிலுள்ள உங்கள்
உறவினர்களுக்கும்,
நண்பர்களுக்கும்



# அம்புலிமாமா

இதழை அவர்கள் விரும்பும்
மொழியில் கொடுங்கள்

அஸ்ஸாமி, வங்காளம், ஆங்கிலம்,
ஹிந்தி, குஜராத்தி, கன்னடம்,
மலையாளம், மராட்டி, சமஸ்கிருதம்,
ஒரியா, தமிழ் மற்றும் தெலுங்கு

அயல் நாட்டிலும் அவர்கள் தம் தாய்நாட்டில்
உள்ளது போன்ற மகிழ்ச்சியை அனுபவிக்கட்டும்

## சந்தா விவரங்கள் :

விமானத்தபாலில் எல்லா நாடுகளுக்கும்
பன்னிரெண்டு பிரதிகளுக்கு ரூ.900/-

இந்தியாவில் தரைவழித் தபாலில்
பன்னிரெண்டு பிரதிகளுக்கு ரூ.120/-

நீங்கள் செலுத்தும் பணத்தை டி.டி.யில் அல்லது
மணியார்டரில் 'சந்தமாமா இந்தியா லிமிடெட்'
என்ற பெயர் எழுதி அனுப்பும் முகவரி :


**SUBSCRIPTION DIVISION**
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097.
E-mail : subscription@chandamama.org



ஆசிரியர்
விஸ்வம்


எல்லாக் கடிதப்
போக்குவரத்துகளும் :


சந்தமாமா
பத்திரிக்கைப் பிரிவு,
எண் : 82, டிஃபென்ஸ்
ஆபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல்,
சென்னை – 600 097.

தொலைபேசி : 2347384
2347399

ஃபேக்ஸ் : 2347384


**For USA**
**Single copy $2**
**Annual subscription $20**
***Intending subscribers in the USA and Canada can mail their remittances to :***
**INDIA ABROAD**
**43 West 24th Street**
**New York, NY 10010**
**Tel: (212) 929-1727**
**Fax (212) 627-9503**
**E-Mail : mail@indiaabroad.com**



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்கரபாணி

# படிக்க நேரம் ஏது ?

குழந்தைகளின் படிக்கும் பழக்கம் குறைந்து கொண்டே வருகிறதா என்பது முற்றுப் பெறாத விவாதமாக உள்ளது. தொலைக்காட்சிப் பெட்டிகள் முன் தம் குழந்தைகள் உட்கார்ந்து நேரத்தை வீணாக்குகிறார்கள் என்று பெற்றோர்கள் கவலைப்படுகிறார்கள். இதனால் அக்குழந்தைகளுக்குப் படிக்க நேரம் ஏது என்று கேட்கிறார்கள். ஆனால் பெற்றோர்களே தொலைக்காட்சிப் பெட்டிகளின் முன் அமர்ந்து நிகழ்ச்சிகளைப் பார்க்கும் போது அவர்களது குழந்தைகள் கண்களை மூடிக் கொண்டா உட்கார்ந்திருக்கும்?

சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன் ரஷ்யாவில் நடத்திய ஆய்வில் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளால் குழந்தைகளின் அறிவு வளர்கிறது என்று தெரிய வந்துள்ளது. புத்தகங்களைப் படிப்பதைவிட இந்நிகழ்ச்சிகளால் அவர்கள் பல புதிய விஷயங்களைத் தெரிந்து கொள்கிறார்கள்.

இப்போது பெற்றோர்கள் கம்ப்யூட்டர், இன்டர்நெட் மற்றும் சில மின் நுணுக்க சாதனங்களால் தம் குழந்தைகளின் படிப்பு கெடுகிறது என்று குறை கூறத் தொடங்கி விட்டார்கள். இதனால் அவர்கள் புத்தகங்களைத் தொடுவது இல்லை என்பது குற்றச்சாட்டு. ஆனால் அவர்களது 'படிப்பு' இவற்றால் குறைந்து விடவில்லை. பெற்றோர்கள் தம் குழந்தைகள் புத்தகங்களைப் படித்து அறிவை வளர்த்துக் கொள்ளவில்லையே என்று எண்ணி வேதனைப்படுகிறார்கள். குழந்தைகள் விரும்பத்தகாத நிகழ்ச்சிகளை இவற்றில் கண்டும், தம் கண்களைக் கெடுத்துக் கொள்கிறார்கள் என்பதும் இவர்கள் கூறும் காரணங்கள்.

ஆனால் புத்தகங்கள் புறக்கணிக்கப்படுகின்றன என்பது தவறு. அண்மையில் இரு மாபெரும் நகர்களில் நடந்த புத்தகச் சந்தைகளே இதற்குச் சான்றாகும். புத்தகங்கள் இங்கு பெருத்த அளவில் விலை போயுள்ளன. குழந்தைகளின் புத்தகங்கள் நன்கு விலை போனதே அவர்கள் புத்தகங்களைப் படிப்பதற்குச் சான்று.



# செய்திச் சுடர்




## ஆயிரம் ஆண்டு விவாதம் !

ஆயிரம் ஆண்டு விவாதம் என்பது உண்மையில் ஒரு வருடத்ததே. புதிய ஆயிரமாவது ஆண்டு பற்றிய கருத்து வேறுபாடு தான் இது. ஜனவரி 2000ல் மூன்றாவது ஆயிரமாவது ஆண்டு ஆரம்பமாகிவிட்டதா என்பதே சர்ச்சை. சிலரது வாதம் 2001 ஜனவரி 1ல் தான் என்பது. ஆர்தர்.சி. கிளார்க் என்ற விஞ்ஞான அடிப்படை எழுத்தாளர் 01.01.01.ல் தான் மூன்றாவது ஆயிரத்தாண்டு தொடங்குகிறது என்றும் அதற்கு முன் தொடங்கி விட்டது எனக் கூறுவது சரியல்ல எனவும் உறுதிபடக் கூறியுள்ளார். 2000 ஜனவரி 1லிருந்தே பலர் இது பற்றித் தம் ஐயப்பாடுகளைக் கேட்டுக் கொண்டே இருந்தார்களாம். அவரது பதிலால் இதற்கு விடை கிடைத்ததாக யாவரும் திருப்தி அடைந்து விட்டார்கள்.

## சாதனைகளில் ஒன்று !

மொராக்கோவிலுள்ள 13 வயதுச் சிறுவன் ஒருவன் தும்மலில் சாதனை படைத்திருக்கிறான். ஆறு நாட்களில் அவன் 1100 தடவை தும்மியிருக்கிறான். இந்த ஆறு நாட்களில் இரண்டு, மூன்று நாட்கள் தினமும் 200 தடவை வீதம் தும்மி இருக்கிறான். இதனை, அவனைப் பரிசோதித்த டாக்டர்கள் குறித்துக் கொடுத்திருக்கிறார்கள். அச்சிறுவன் மேலும் தும்மாமலிருக்க, அவர்கள் மருந்துகள் கொடுத்து அவனைத் தூங்க வைத்தார்களாம்.



## இரு ஆயிரமாவது ஆண்டிலிருந்து மற்றதற்கு !

கோலாலம்பூரிலுள்ள உலகிலேயே மிக உயரமான 390 மீ. உயர 'பெட்ரோனஸ் ட்வின் டவர்ஸ்'லிருந்து பதினோரு வீரர்கள் 2000வது ஆண்டின் கடைசி நிமிஷத்தில் கீழே குதித்து 2001வது ஆண்டு ஆரம்ப நிமிடத்தில் தரை மீது நின்றார்களாம். இவர்கள் அமெரிக்கா, ஜெர்மனி, ஸ்வீடன், சவூதி அரேபியா ஆகிய நாடுகளைச் சேர்ந்தவர்கள்.

## நீச்சலில் திறமை !



இருபத்தோறு வயதான சியாம் பிரபோதினி கேரளத்தைச் சேர்ந்தவர். இவர் தம் கைகளையும், கால்களையும் கட்டிக் கொண்டு கேரளத்துக் காயல் ஒன்றில் குதித்து 3 கி.மீ. தூரத்தை 19 நிமிடங்களில் கடந்தாராம். அவர் கரையேறிய போது அவரது கை, கால் முடிச்சுகள் இறுக்கமாகவே இருந்தனவாம். இந்த அதிசயத்தை ஆயிரம் பேர்கள் கொண்ட கூட்டம் கண்டு அதிசயப்பட்டு சியாம் கரைக்கு வந்ததும் வெகுவாகப் பாராட்டியது.

## கணித ஆசிரியர்களின் தோற்றங்கள் !

இங்கிலாந்தின் சில ஆய்வாளர்கள் குழந்தைகள் தம் கணித ஆசிரியர்களை எவ்வாறு உருவகப்படுத்தி நினைக்கிறார்கள் எனக் காண விரும்பினார்கள். எனவே, அவர்கள் 12லிருந்து 13 வயது வரையுள்ள 300 சிறுவர் சிறுமியர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களிடம் அவர்களது கணித ஆசிரியர்கள் எப்படி இருக்கிறார்கள் என்று படம் வரைந்து காட்டச் சொன்னார்கள். ஒரு சிலரே அவர்களை அழகாகச் சித்தரித்தார்கள். மற்ற பெரும்பாலானவர்களோ சொட்டைத் தலை, தாடி, மூக்குக் கண்ணாடி, நெற்றியில் சுருக்கங்கள், கடுகடுப்பான முகம் ஆகிய அருவருக்கத் தக்க விதமாய் சித்தரித்திருந்தார்கள். சிலர் தலையில் கொம்புகளைக் கூடப் போட்டிருந்தார்களாம். சிலர் 'கணித ஆசிரியர்களுக்கு நண்பர்களே இல்லை' என்றும், 'முன்கோபிகள்' என்றும், 'குழந்தைகளை மிரட்டிக் கணக்கு போட வைக்கிறார்கள்' என்றும் குறிப்புகள் எழுதினார்களாம். பிரிட்டன், நார்வே, ஸ்வீடன், பின்லாந்து, ஜெர்மனி, ருமேனியா, அமெரிக்கா ஆகிய நாடுகளிலிருந்து வந்த இந்த ஆய்வாளர்கள் கணித ஆசிரியர்களின் கவனத்திற்கு இவற்றையெல்லாம் கொண்டு வந்து, தக்க மாறுதல்களைச் செய்து கொள்ள வேண்டிக் கொண்டிருக்கிறார்கள்.



# குஜராத்தில் கொடிய பூகம்பம்

இந்த ஆண்டில் குடியரசு தின விழாவை ஜனவரி 26ல் எல்லா மாநிலங்களின் தலைநகரங்களும், கிராமங்களும் கோலாகலமாகக் கொண்டாடிக் கொண்டிருக்கும் போது அதே சமயத்தில் குஜராத் மாநில மக்கள் மட்டும் கண்ணீர் விட்டுக் கதறிப் பரிதாப நிலைக்கு ஆளாகி இருந்தார்கள். இதற்குக் காரணம் அங்கு அன்று ஏற்பட்ட பயங்கர பூகம்பமே.

இக்கொடிய பூகம்பத்தால் அம்மாநிலத்தின் பல நகரங்களும், ஊர்களும் அடியோடு நாசமாகி விட்டன. மக்கள் ஆயிரக்கணக்கில் இந்த இடிபாடுகளில் புதைந்து விட்டார்கள். எவ்வளவு பேர்கள் உயிரிழந்தார்கள் என்பதை இன்னமும் கூடக் கணக்கிட முடியாமல் இருக்கிறது. ஆயிரக்கணக்கில் வீடுகளும், அவற்றிலிருந்த எல்லாப் பொருள்களும் அழிந்து போயின. சில ஆயிரம் பேர்கள் எப்படியோ உயிர் தப்பினார்கள். பல்லாயிரம் பேர்கள் படுகாயங்களும், சிறு காயங்களும் அடைந்தார்கள். எவ்வளவோ பேர்கள் காணாமல் போய் விட்டார்கள். ஆயிரக்கணக்கான குழந்தைகள் அநாதைகளாகிவிட்டன.

மிகக் கொடூரமாக பாதிக்கப்பட்டது புஜ் நகரமே. அடுத்து கச் பகுதியிலுள்ள ஆன்ஜர் ராபார், பசௌ, அகமதாபாத் மற்றும் இவற்றைச் சுற்றியுள்ள பகுதிகளும் பெருத்த அழிவைக் கண்டுள்ளன. கச் சதுப்பு நிலப்பகுதியை மையமாகக் கொண்டு இந்த நிலநடுக்கம் தெற்குப் பகுதியைத் தாக்கியுள்ளது.

துவாரகையின் ஆலயமும், புஜ்ஜிலிருந்த வரலாற்று அருங்காட்சியகமும், மற்றும் பல வரலாற்றுச் சின்னங்களும் மிகவும் சேத முற்றிருப்பதாகச் செய்திகள் கூறுகின்றன. போர்க்கால அடிப்படையில் மீட்புப்பணிகள் குஜராத்தில் மிக வேகமாக நடந்து கொண்டிருக்கின்றன. தொண்டர்கள் இப்பணியில் ஈடுபடக் குவிந்து வருகிறார்கள். மருந்துகள்,ஆடைகள், உணவுப் பொருள்கள் என்று பல பொருள்களைப் பல நாட்டவர்களும், நம் மக்களும் அம்மாநிலத்திற்குத் தொடர்ந்து அனுப்பிய வண்ணம் இருக்கிறார்கள்.

புயல், சூறாவளி, பூகம்பம் ஆகியவை ஈவிரக்கமில்லாமல் நிகழ்பவை. இவற்றில் சில வரப் போவது பற்றி விஞ்ஞானிகளும், விஞ்ஞான சாதனங்களும் முன்கூட்டியே எச்சரிக்க முடியுமென்றாலும், பூகம்பம் பற்றி உடனடியாக இவற்றால் எச்சரிக்கை செய்ய முடிவதில்லை. ஆகையால் தான் பூகம்பத்தால் இத்தகைய படுமோசமான அழிவுகளை அடைய வேண்டியுள்ளது.

நாம் எல்லோரும் ஒன்றுதிரண்டு குஜராத் மாநில மக்களின் இந்த அவலநிலையைப் போக்க உதவிக்கரங்களை நீட்டுவோம். பிரதம மந்திரியின் தேசிய நிவாரண நிதிக்கு நம் நன்கொடைகளை நம் சக்திக்கேற்ப அனுப்புவோம். எல்லோரிடமும் நன்கொடைகளை பிரதம மந்திரியின் தேசிய நிவாரண நிதி, c/o. பிரதம மந்திரி அலுவலகம், புது டில்லி - 110 011 என்ற முகவரிக்கு அனுப்புமாறு கூறி பிரதம மந்திரியின் கரங்களைத் துயர் துடைக்கும் இவ்வேளையில் வலுப்படுத்துவோம்.

பதிப்பகத்தார்

வேதாளம்
சொல்லும்
கதை

# உதவியும் திருப்தியும்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே...! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படி சிரமப்பட்டு யாருக்கு உதவப் போகிறாய்? நீ யாருக்கு உதவுகிறாயோ, அவன் அதனால் திருப்தி அடைவானென்றா நீ நினைக்கிறாய்? இது பற்றி




பிறரைத் திருப்திப்படுத்துவது தான் நல்லவன் செய்யும் செயல். பிறருக்கு நன்மை ஏற்பட தான் எதையாவது தியாகம் செய்ய வேண்டி வந்தால், அப்படிச் செய்பவனே நல்லவன். இவற்றை மனதில் கொண்டு நீ நடந்து நல்லவன் என்ற பெயரை அடை'', என்றார்.

வீராசாமியின் மனதில் அவனது தாத்தா கூறிய அறிவுரை நன்கு பதிந்தது. அது முதல் அவன் பிறருக்கு உதவுவதையே தன் முதலாவது வேலையாகக் கொண்டான். ஒரு நாள் அவனது வீட்டிற்கு அவனது தாய் மாமன் வந்தான். அவன் வீராசாமியின் நற்குணங்களையும், பரோபகாரச் சிந்தனையைப் பற்றியும் அறிந்திருந்ததால் அவனைத் தன் மகள் கமலாவுக்கு மணமுடித்து வைத்துத் தன் மாப்பிள்ளையாக்கிக் கொள்ள நினைத்தான். கமலா அழகானவள். பணிவும், நல்லறிவும் படைத்தவள். அவள் தம் வீட்டு மருமகளாக வருவதில் வீராசாமியின் பெற்றோர்களும் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்கள். ஆனால் வீராசாமியோ தனக்குத் திருமணம் செய்து கொள்ளவே விருப்பம் இல்லை என்று கூறினான்.

அதுகேட்டு அவனது மாமன் ஆச்சரியப்பட்டு, அதற்கு என்ன காரணம் என்று கேட்கவே, வீராசாமியும், ''நான் படிக்கவில்லை. எத்துறையிலும் தேர்ச்சியும் பெறவில்லை'', என பதில் அளித்தான். தாய்மாமனோ, ''நீ தான் விவசாயம் செய்து கொண்டிருக்கிறாயே! அது

உனக்கு ஒரு கதை கூறுகிறேன். கவனமாகக் கேள்'', என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

வீராசாமி நடுத்தரக் குடும்பத்தில் பிறந்தவன். சாப்பாட்டிற்குத் திண்டாட வேண்டிய நிலையில் அவன் இல்லை. ஆனால் அவன் படிக்காததால், எந்த ஓர் உத்தியோகமும் பெற முடியவில்லை. எந்த வேலையும் செய்யத் தெரியாததால், தன் எதிர்காலம் எப்படி இருக்கப் போகிறதோ என்று அவன் கவலைப்படலானான். அதைக் கண்டு அவனது தாத்தா, ''வீரா...! உலகில் ஒரு சாதனை புரிய வேண்டும் என்று நினைப்பதைவிட நல்லவனாக வாழ்வதே மேல். சுயநலம், பொறாமை, வெறுப்பு ஆகிய எதுவும் இல்லாமல் பிறரது நற்குணங்களைக் கண்டு மகிழ்ந்து

போதுமே.'', என்றான். வீராசாமியும், ''அதில் என் திறமை என்ன இருக்கிறது? என் தந்தை கூறுவதைத் தானே அப்படியே செய்கிறேன்'', என்றான்.

மாமனும், ''இப்படி நீ கூறுவது உன் தன்னடக்கத்தையே காட்டுகிறது. விவசாயத்தை ஒரே நாளில் கற்றுவிட முடியாது. நீண்ட நாள் அனுபவத்தால் தான் முடியும். நீ நல்ல விவசாயி என்று பெயர் பெறத்தான் போகிறாய். அப்போது உன் மனம் மிகவும் மகிழ்ச்சி அடையும்'', என்றான். வீராசாமியும், ''நான் மகிழ்ச்சி அடைவேனா? இல்லை. நான் மகிழ்ச்சியுடன் இல்லாதிருக்கும் போது எனக்குத் திருமணம் எதற்கு?'', என்று கேட்டான். அதற்கு அவனது தாய் மாமன் உடனே பதில் கூறவில்லை.

இரண்டு நாட்கள் கழிந்த பின் அவனது தாய்மாமன், ''வீராசாமி...! இவ்வூருக்கு நான் வந்த வேலை முடிந்துவிட்டது. இன்று நான் என் ஊருக்குக் கிளம்பிப் போகிறேன். நீயும் என்னுடன் வா ! நீ மகிழ்ச்சியுடன் இருக்க வழி சொல்கிறேன்'', என்றான். வீராசாமியும் அதற்குச் சம்மதித்து தன் மாமனுடன் அவனுடைய ஊருக்குச் சென்றான்.

கமலா சுறுசுறுப்புடன் எல்லோரிடமும் சிரித்துப் பேசி யாவரையும் மகிழ்விப்பது கண்டு, தானும் அவ்வாறே இருக்க வேண்டுமென்று வீராசாமி தீர்மானித்துக் கொண்டான். அவனது தாய்மாமனும், ''நான் இங்கு பலரைக் கண்டு பல நற்செய்திகளைக் கூறி அவர்களை மகிழ்விக்க வேண்



டும். நான் போய்விட்டு வரச் சற்று தாமதமாகலாம். அதுவரை நீ கமலாவுடன் பேசிக் கெண்டிருக்கிறாயா?'', என்று வீராசாமியிடம் கேட்டான்.

அப்போது கமலா, ''அப்பா...! நானும் உங்களோடு வருகிறேன். அத்தானையும் நம்மோடு அழைத்துக் கொண்டு போகலாம் !'', என்றாள். வீராசாமியும் அவர்களோடு சேர்ந்து சென்றான். தெருமுனைக்குச் சென்ற போது அங்கு ஒரு சிறுவன் 'திரு, திரு'வென்று விழித்துக் கொண்டு நின்றதைக் கண்ட கமலா, ''என்ன கண்ணா? ஏன் இப்படி முழித்துக் கொண்டிருக்கிறாய்?'', என்று கேட்டாள். அவனும், ''என் கோலிக்குண்டு இந்தப் பள்ளத்துள் விழுந்துவிட்டது. அதை எடுக்கப் போனேன். அங்கே 'புஸ்'ஸென்ற சத்தம் வருகிறது. ஒரு



வேளை அங்கே பாம்பு இருக்கிறதோ என்னவோ?'', என்று பயந்தவாறே கூறினான். கமலாவும், ''அப்பா...! நீங்கள் இருவரும் போய்க் கொண்டே இருங்கள். நான் இவனது கோலியைத் தேடிக் கண்டுபிடித்துக் கொடுத்து விட்டு வருகிறேன்'', என்றாள்.

அவனது தந்தையும், ''நீ எப்போதும் இப்படித்தான்'', என்று கூறியவாறே வீராசாமியுடன் முன்னே சென்றான். வீராசாமியை அவன் மாமன் ஒரு வீட்டிற்கு அழைத்துச் சென்றான். அந்த வீட்டுக்காரனிடம் மாமன், ''நீ பெரும் அதிர்ஷ்டசாலி. நீ கொடுக்கும் வரதட்சிணையை வாங்கிக் கொள்வதாக ராமசாமி கூறிவிட்டான். இனி உன் மகளின் திருமணம் தடை இல்லாமல் நடந்து விடும்'', என்றான். அந்த வீட்டுக்காரனும் மகிழ்ந்து, ''எல்லாம் நல்ல படியே நடக்கட்டும்'', என்றான்.

அங்கிருந்து இருவரும் இன்னொருவரின் வீட்டிற்குச் சென்றார்கள். அங்கிருந்த இளைஞனைப் பார்த்து, வீராசாமியின் மாமன், ''உனக்கு வேலை கிடைத்துவிட்டது. என் மருமகனின் ஊர் ஜமீன்தாரர் தன் இளைய மனைவியின் புதல்வர்களுக்குப் படிப்பு சொல்லித் தர நல்ல ஆசிரியர் வேண்டுமென்றார். நான் உன்னைப் பற்றிச் சொல்லவே, அவரும் உனக்கு மாதம் நூறு ரூபாய் கொடுப்பதாகக் கூறியுள்ளார். முதலில் இந்த வேலையை ஏற்றுக் கொள். பிறகு ஜமீன் நிர்வாக அலுவலகத்திலேயே நல்ல வேலை உனக்குக் கிடைக்கும்'', என்றான். அதைக் கேட்டு அந்த இளைஞன் மிகவும் மகிழ்ந்து போனான்.

இருவரும் அங்கிருந்து தம் வீட்டிற்குத் திரும்பிச் சென்றார்கள். வழியில் கமலாவைக் கண்டார்கள். அவளும், ''கண்ணனின் கோலியைக் கண்டுபிடித்து எடுத்துக் கொடுத்து விட்டேன். அவனுடைய மகிழ்ச்சிக்கு அளவே இல்லை'', என்றாள் குதூகலத்துடன். அதன்பின் மூவரும் வீடு வந்து சேர்ந்தார்கள். அப்போது வீராசாமியிடம் அவனது மாமன், ''பார்த்தாயா? கமலாவின் இந்த மகிழ்ச்சிக்கு என்ன காரணம் என்று சொல்ல முடியுமா?'', என்று கேட்டான்.

வீராசாமியும், ''கோலி கிடைத்ததற்காக கண்ணன் மகிழ்ந்தான். தான் சிரமப்பட்டதால் தான் கண்ணனுக்கு

மகிழ்ச்சி ஏற்பட்டது என்று எண்ணி கமலா சந்தோஷப்பட்டாள்'', என் றான். அவனது மாமனும், ''பிறருக்கு உதவுவதில் நமக்கு மகிழ்ச்சியும், உதவி பெற்றவர்கள் மகிழ்ச்சி யடைந்து திருப்தி அடைவதையும் காண்கிறோம். இதை நீ புரிந்து கொண் டால் போதும்'', என்றான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி, ''மன்னனே...! வீராசாமியின் தாய் மாமன் இந்த மூவரின் மகிழ்ச்சியை எடுத்துக் காட்டி வீராசாமியைத் திருப்தி அடையச் செய்தானா? அந்த மாமன் கூறியது முற்றிலும் சரி தானா? இக்கேள்விகளுக்குச் சரியான விடை களை அறிந்திருந்தும் நீ கூறாவிட் டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகிவிடும்'', என்றது.

அப்போது விக்கிரமனும், ''வீரா சாமியின் மாமன் உலக அனுபவம் பெற்றவன். மனிதர்களின் மனப் போக்கை நன்கு அறிந்தவன். எனவே, மூவருக்கும் எதிர்பாராத உதவி கிடைத்ததும், மூவரும் அதனால் தமக்கு ஏற்பட்ட நன்மைகளைக் கண்டு மகிழ்ந்து திருப்தி அடைந் தார்கள். எதிர்பாராத விதமாக கமலாவின் உதவி கிடைத்ததால் கண்ணன் மகிழ்ந்து திருப்தி அடைந்தான். இது போல, எதிர்பாராத விதமாய் வீராசாமியின் உதவி கிடைத்து வரதட்சிணைக் பிரச்சினை தீர்ந்து விடவே அவ்வீட்டுக்காரன் மகிழ்ச்சியும், திருப்தியும் அடைந் தான். இதுபோல, இன்னொரு வீட்டு இளைஞனுக்கும் எதிர்பாராத வித மாய் உதவி கிடைத்ததால் வேலை கிடைத்தது பெரும் மகிழ்ச்சியையும், திருப்தியையும் அளித்தது. இம் மூவருக்கும் உதவி செய்த கமலாவும், வீராசாமியின் மாமனும் தாம் செய்த பரோபகாரத்தால் மகிழ்ச்சியும், திருப்தியும் அடைந்தார்கள்'', என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது.



## அன்றுஇதேமாதத்தில்பிறந்தவர்

ஜெர்மனியிலிருந்து விமானத்தில் 1933ல் வந்த டாக்டர் பட்டம் பெற்ற இளைஞன் ஒருவன் சென்னை விமானத்தில் இறங்கி நேராக 'ஹிந்து' பத்திரிகை அலுவலகத்திற்குச் சென்றான். அங்கு அதன் ஆசிரியரிடம் அவன், "ஐயா...! நான் ஒரு கட்டுரை எழுதிக் கொடுத்தால், எனக்குப் பணம் கொடுப்பீர்களா? இங் கிருந்து என் சொந்த ஊருக்குப் போக என்னிடம் பணம் இல்லை. அதனால் தான் இப்படிக் கேட்கிறேன்'', என்றான். ஆசிரியர் அதற்குச் சம்மதிக்கவே, அவன் அப்போதே கட்டுரையை எழுதிக் கொடுத்து விட்டு, பணம் வாங்கிக் கொண்டு தன் ஊர் போய்ச் சேர்ந்தான்.

அந்த இளைஞன் தான் ராம் மனோஹர் லோஹியா. சிறந்த அரசியல்வாதி, அறிவாளி. சோஷலிஸ்ட் த்லைவர் எனப் பிற்காலத்தில் பெயர் பெற்றார் இவர். அப்போதைய ஐக்கிய மாகாணத்து அக்பர்பூர் என்ற கிராமத்தில் 1910 மார்ச் 23ல் இவர் பிறந்தார்.

இவர் தமது பத்தாவது வயதிலேயே அரசியலில் ஈடு பட்டார். அந்நிய நாட்டுப் பொருள்களை பகிஷ்கரித்து, கதர் அணிந்து, சுதேசி இயக்கத்திலும், ஒத்துழையாமை இயக்கத்திலும் ஈடுபட்டார். காந்திஜீயின் சத்தியாக்கிரக இயக்கத்திலும் கலந்து கொண்டார். காசி ஹிந்து பல்கலைக் கழகத்தில் மாணவராக இருந்த போதே சிறந்த பேச்சாளர் என்று பெயர் பெற்று விட்டார். 1929ல் அகில இந்திய மாணவர் காங்கிரஸின் தலைவரானார்.

இந்திய தேசிய காங்கிரஸில் இவர் 1934ல் சேர்ந்து அதில் காங்கிரஸ் சோஷலிஸ்ட்கள் என்ற பிரிவை ஏற்படுத்தினார். 'காங்கிரஸ் சோஷலிஸ்ட்' என்ற பத்திரிகைக்கு இவர் ஆசிரியராக நியமிக்கப்பட்டார். 1942 'வெள் ளையனே வெளியேறு" இயக்கத்தின் போது, இவர் தலைமறைவாகி சுவரொட்டிகளை யும், துண்டு பிரசுரங்களையும் அச்சிட்டு வெளியிட்டார்.



டாக்டர். ராம் மனோஹர் லோஹியா

காங்கிரஸ் ரேடியோ என்ற மர்ம வானொலி நிலையத்தை பம்பாயில் அமைத்து மக்களின் தேசிய உணர்வைத் தூண்டினார். அரசாங்கம் இவரைக் கைது செய்து சித்திர வதை செய்தது.

உலகரங்கிலும் இவர் புகழ் ஓங்கியது. 1952ல் முதலாவது ஆசிய சோஷலிஸ்ட் மாநாட்டைக் கூட்டினார். 1953ல் பிரஜா சோஷலிஸ்ட் கட்சியை நிறுவி இன, வர்க்க வேறுபாடற்ற சமுதாயத்தை அமைக்கப் பாடுபட்டார். 1963ல் பருகாபாதில் நடந்த இடைத் தேர்தலில் வெற்றி பெற்று நாடாளு மன்றத்திற்குச் சென்ற இவர் தம் கருத்துக்களை அழுத்தம் திருத்தமாகக் கூறினார். மிகச் சிறந்த நாடாளுமன்ற உறுப்பினர்களில் ஒருவராகக் கருதப்பட்ட இவர் மக்களைப் பல ஆக்கப் பூர்வத் திட்டங்களில் ஈடுபடுத்தினார். 1967 அக்டோபர் 12ல் இவர் அமரரானார்.

இவர் 1940ல் 'ஹரிஜன்' பத்திரிகையில் எழுதிய கட்டுரை அரசாங்கத்திற்கு எதிரானது எனக் கூறி கைது செய்யப்பட்ட போது காந்திஜீ இவரைப் பற்றி "லோஹியாவைப் போன்ற எளிமையும், துணிச்சலுமான வேறு ஒருவரை நான் அறியவில்லை. அவர் வன்முறைக்கு ஆதரவு அளிக்கவில்லை. அவரது செயல்கள் அவரது மதிப்பையும், கௌரவத்தையும் உயர்த்தியே வந்துள்ளன'', என்று புகழ்ந்து கூறினார்.




# மாயாஜால மலை

## 2

(கொள்ளைக்காரத் தலைவன் சொர்ணம் என்பவனைச் சிறைப்பிடித்துத் துன்புறுத்திக் காட்டில் க்ஷத்திரிய வாலிபர்கள் இருவர் வாழும் இடத்தை அடைந்தான். சொர்ணம் தன்னைக் காப்பாற்றும்படி உரக்கக் கூவவே, அதை அவனது நண்பன் விக்கினேஸ்வரன் கேட்டு ஓடி வந்து பார்த்தான். நிலைமையைப் புரிந்து கொண்டு அவன் க்ஷத்திரிய வாலிபர்கள் வளர்த்து வந்த சிங்கத்தைக் கூண்டிலிருந்து வெளியே விட அது ஒரு கொள்ளைக்காரனின் மீது பாய்ந்தது. அப்போது –)

திடீரென ஒரு சிங்கம் தன் ஆளின் மீது பாய்ந்தது கண்டு கொள்ளைக் காரத் தலைவன் பயந்து போனான். சட்டெனச் சமாளித்துக் கொண்டு, அவன் அந்த சிங்கத்தின் மீது தன் ஈட்டியை எறிந்தான். அது குறி தவறி எங்கோ போய் விழுந்தது. சிங்கமோ தான் பிடித்தவனைப் புரட்டி எடுத்துக் கொண்டிருந்தது. அந்த ஆள் ஏறி இருந்த ஒட்டகம் மிரண்டு ஓடியது. சிறைப்பட்ட சொர்ணத்திடம், ''ஓடி வா...! கத்தாதே. வாயை மூடிக் கொண்டு என்னுடன் வா! அப்படி வராவிட்டால் உன்னை ஒட்டகத்தின் மீதிருந்து கீழே தள்ளி, அந்த சிங்கத்திற்கு இரையாக்கி விடு வேன்'', என்று பயமுறுத்தினான். அதுகேட்டு சொர்ணம் சிரித்துக் கொண்டே, ''ஆகா...! என்னை இப்போதே அந்த சிங்கத்திற்கு இரை யாகப் போட்டுவிடு'' என்றான்.

அதைக் கேட்ட கொள்ளைக்காரத் தலைவன் சொர்ணத்தை சிங்கத்திற்கு இரையாக்கும் எண்ணத்தைக் கை விட்டான். சொர்ணம் வாஸ்து சாஸ் திரம் அறிந்தவனாதலால் தான் நிர்மாணிக்கப் போகும் நகரத்தை அமைக்கும் பணியில் அவனைப்



பயன்படுத்திக் கொள்ள அத் தலைவன் விரும்பினான். எனவே, தன் ஆளிடம் அவன், ''இந்தப் பயல் தப்பி ஓடிவிடப் போகிறான். ஜாக் கிரதையாகப் பார்த்துக் கொள். இவ னால் நமக்கு வேலை ஆக வேண்டி யுள்ளது. அதைச் செய்ய மறுத்தால், அப்போது இவனை என்ன செய்வது என்று தீர்மானிக்கலாம். இப்போ தைக்கு எதுவும் செய்யாமல் விட்டு வைப்போம்'', என்றான்.

அதைக் கேட்ட சொர்ணத்திற்குத் தன்னை அவர்கள் எங்கேயோ கொண்டு போய்க் கொன்றுவிடுவார் களோ என்ற பயம் ஏற்பட்டது. அதனால் அவன் சிங்கத்தைப் பார்த்து, ''பரசு...! பரசு...!!'', என்று கத்திய வாறே, ''ஐயோ...! என்னை யாராவது காப்பாற்றுங்களேன்'', என்று கத்தி னான். சிங்கமும் தன் பெயரைச் சொல்லி யாரோ கூப்பிடுவதைக் கேட்டு சொர்ணம் இருந்த ஒட்டகத் தின் மீது பாய்ந்தது. அதற்குள் கொள்ளைக்காரத் தலைவன் ஒட்ட கத்தை ஓட்டக் கட்டியிருந்த கயிறைப் பிடித்து ஆட்டவே அது வேகமாக ஓடலாயிற்று. அதன்பின் கொள்ளைக் காரத் தலைவன் தன் ஒட்டகத்தை அதன் பின்னால் ஓட்டிச் சென்றான்.

இதையெல்லாம் குடிலின் பின்னால் நின்று பார்த்துக் கொண் டிருந்த விக்கினேசுவரனுக்குத் தன் நண்பன் சொர்ணம் கொள்ளைக்காரர் களிடம் சிறைப்பட்டது மிக்க வேத னையை அளித்தது. அப்போது சற்று தூரத்தில் இரு க்ஷத்திரிய வாலிபர் களும் வந்து கொண்டிருப்பதை அவன் கண்டான். அவன் ஓடிப்போய் அவர்கள் முன்னால் நின்று, ''என்ன சொல்வேன்? குடியே முழுகிப் போய் விட்டதே!'', என்று ஓலமிட்டான்.

அதைக் கேட்டு அவர்களில் ஒருவனான ஜீவதத்தன், ''என்ன நடந்தது? நம் பரசு கூண்டிலிருந்து எப்படி வெளியே வந்தது?'', என்று கேட்டான். விக்கினேசுவரனும் அங்கு கொள்ளைக்காரர்கள் வந்ததை விவரமாகக் கூறி, ''நம் பரசு அடித்துக் கொன்ற ஒரு கொள்ளைக்காரனின் உடல் நம் குடிலின் முன்னால் கிடக்கிறது. வந்து பாருங்கள்'', என்றான். அதுகேட்டு ஜீவதத்தனும் கஜவர்மனும் தம் குடிசையின் முன் பக்கத்திற்குச் சென்று பார்த்தார்கள்.

ஜீவதத்தன் அந்த உடலை நன்கு பார்த்துவிட்டு, ''இவன் நம் காட்டில்

வசிப்பவன் அல்ல. இவனது முகச் சாயலையும், அணிந்திருக்கும் ஆடைகளையும் பார்த்தால் வெகு தொலைவிலிருந்து நம் காட்டிற்குள் வந்தவன் போலத் தெரிகிறது'' என்றான். கஜவர்மனும், ''இவன் மட்டும் இறக்காது இருந்திருந்தால், இவனை விசாரித்து கொள்ளைக்காரர்களைப் பற்றிய முழு விவரங்களையும் அறிந்து கொண்டிருக்கலாம்'' என்றான். ஜீவதத்தனும், ''கஜா...! இந்தக் கொள்ளைக்காரர்களை விட்டு வைக்கக் கூடாது. அவர்களைக் காண்டாமிருகக் கூட்டத்தவர்களில் யாராவது ஒருவன் பார்த்திருப்பான். எனவே, சுற்றுப் பக்கத்தில் அவர்களில் யாராவது ஒருவன் இருக்கிறானா என்று பார்ப்போம். விக்கினேசுவரா...! நீ போய்ப் பார் ! யாராவது காண்டாமிருகத்தவன் இருந்தால் அவனை அழைத்து வா...!'' என்றான்.

விக்கினேசுவரனும் சற்று தூரம் போனதும் காண்டாமிருகத்தவர் சிலர் தம் தலைவன் ஆரணியமல்லனுடன் வந்து கொண்டிருப்பதைக் கண்டான். அவன் அவர்களருகே சென்று, ''இரு க்ஷத்திரிய வாலிபர்களும் இப்போது தான் வந்தார்கள். ஒட்டகத்தின் மீதேறி வந்த கொள்ளைக்காரர்களை நீங்கள் யாராவது பார்த்தீர்களா? அவர்கள் என் நண்பன் சொர்ணத்தைச் சிறைப் பிடித்துக் கொண்டு போய்விட்டார்கள்'', என்றான். ஆரணியமல்லனும், ''அந்தப் படுபாவிகள் நாங்கள் விளைவித்த பயிரை எல்லாம் அறுத்துக் கொள்ளை கொண்டு போகிறார்கள். இதை ஜீவதத்தனிடமும், கஜவர்மனிடமும் கூறவே போய்க் கொண்டு இருக்கிறோம்'' என்றார்கள்.



விக்கினேசுவரனும், ''அவர்கள் தம் குடிசையில் தான் இருக்கிறார்கள். வாருங்கள், போகலாம்'', என்று கூறி அவர்களை அழைத்துக் கொண்டு சென்றான். ஆரணியமல்லனும் அவர்களிடம், ''கொள்ளைக்காரர்கள் எம் வயல்களில் புகுந்து எம் பயிர்களை அறுத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களை எதிர்க்கப் போன என் சில வீரர்கள் பயந்து ஓடிவந்து விட்டார்கள்'', என்றான். அப்போது ஆரணியமல்லனுடன் இருந்த சீலமுகன், ''நான் தான் சில வீரர்களுடன் சென்றவன். அவர்கள் ஒட்டகம் எனப்படும் விசித்திர மிருகங்கள் மீது அமர்ந்து வந்திருக்கிறார்கள். இது வரை நாங்கள் பார்த்திராத அந்த



மிருகங்களைக் கண்டு பயந்து விட்டோம்'', என்றான்.

அப்போது ஜீவதத்தன், ''நடந்தது என்னவோ நடந்துவிட்டது. இப்போது நம் சொர்ணத்தை விடுவித்துக் கொண்டு வரவேண்டும். அதற்காக என்னுடன் உன் ஆட்களில் சிலரை அனுப்பு!'', என்றான். ஆரணிய மல்லனும் சிலரைத் தேர்ந்தெடுத்தான். அவர்களில் நால்வரிடம், ''நீங்கள் போய் கொள்ளைக்காரர்கள் எவ்வழியில் சென்று கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிந்து வாருங்கள்'', என்று கூறி அவர்களை அனுப்பினான்.

மாலைப் பொழுது முடியலாயிற்று. ஜீவதத்தனும், கஜவர்மனும் உணவு தயாரித்து உண்டுவிட்டுக் குடிசையின் முன்னால் அமர்ந்தனர். சற்று நேரத்திற்குப் பின் அவர்கள் அனுப்பிய நால்வரில் ஒருவன் வந்து, ''அவர்கள் இந்த மலையின் வடக்கே உள்ள பாதை வழியே சென்று கொண்டிருக்கிறார்கள். என்னுடன் சென்றவர்கள் அந்தக் கொள்ளைக்காரர்களைப் பின் தொடர்ந்து போய்க் கொண்டிருக்கிறார்கள். நாம் விரைந்து சென்றால் அவர்களை அணுகி விடலாம்'', என்றான்.

ஜீவதத்தனும், கஜவர்மனிடம், ''கஜா...! நாம் இப்போதே புறப்படுவோம். இந்த இருட்டு நமக்கு உதவியாக இருக்கும். இன்றிரவிற்குள் நாம் சொர்ணத்தை விடுவித்துக் கொண்டு வரவேண்டும்'', என்றான். அப்போது விக்கினேசுவரன், ''இதோ இறந்து கிடக்கும் இந்தக் கொள்ளைக்காரனின் ஒட்டகம் இங்கு அருகில் தான் எங்காவது திரிந்து கொண்டிருக்கும். அதைப் பிடித்து வந்தால் அதன் மீது அமர்ந்து வேகமாகச் சென்று விடலாம்'', என்று யோசனை கூறினான்.

அதைக் கேட்டு இரு காண்டா மிருகத்தவர்கள் கிளம்பிப் போய் சற்று நேரத்துள் ஓர் ஒட்டகத்துடன் வந்தார்

கள். ஜீவதத்தனும், கஜவர்மனும் அதன் மீது ஏறி உட்கார்ந்து கொண்டு காண்டாமிருகத்தவன் காட்டிய வழியில் சென்றார்கள். அவர்கள் காட்டில் கொஞ்ச தூரம் சென்றதும் ஆற்றின் கரை ஓரமாக ஒரு மலையின் பக்கத்தில் கொள்ளைக்காரர்கள் தங்கி, சமையலில் ஈடுபட்டிருப்பதைக் கண்டார்கள். சிலர் உலர்ந்த குச்சி களையும், ஒடிந்து விழுந்து கிடந்த மரக்கிளைகளையும் தேடி எடுத்து வருவதையும் அவர்கள் கவனித் தார்கள்.

ஜீவதத்தன் கஜவர்மனிடம், ''நாம் சொர்ணத்தைப் பற்றி அறிய வேண்டு மென்றால் உலர்ந்த மரக்கட்டை களைப் பொறுக்குபவர்களில் ஒரு வனைப் பிடித்து இழுத்து வந்து விசாரிக்க வேண்டும். எனவே, நீயும் இன்னொருவனும் போய் ஒரு கொள்ளைக்காரனைப் பிடித்து வாருங் கள். நாங்கள் இங்கேயே மறைந் திருக்கிறோம்'', என்றான். கஜவர்ம னும் ஒரு காண்டாமிருகத்தவனுடன் கிளம்பிச் சென்றான். ஓரிடத்தில் தனியாக ஒரு கொள்ளைக்காரன் உலர்ந்த கட்டைகளைப் பொறுக்கிக் கொண்டிருப்பதை கஜவர்மன் பார்த்தான்.

கஜவர்மன் பூனை போலப் பதுங் கிச் சென்று அந்தக் கொள்ளைக்கார னின் பின்னால் போய்ச் சட்டெனப் பாய்ந்து அவனைப் பிடித்து அவன் கத்தி விடாதபடி அவனது வாயில் இலைகளைத் திணித்தான். காண்டா மிருகத்தவன் ஓடிவந்து தன் ஈட்டியை



அவன் கழுத்தின் மீது வைத்து, ''சத்தம் போட்டால் கொன்று விடுவேன். பேசாமல் நட'', என மிரட்டினான். கொள்ளைக்காரனால் எதுவும் செய்ய முடியவில்லை. கஜவர்மனும் காண்டாமிருகத்தவ னும் அவனை நடத்திக் கூட்டிக் கொண்டு ஜீவதத்தன் மறைந்திருக்கும் இடத்திற்குச் சென்றனர்.

ஜீவதத்தன் அவனிடம், ''அடே...! நீங்கள் சோளக் கதிர்களை அறுத்த போது பிடித்து இழுத்துக் கொண்டு போன சொர்ணம் எங்கே இருக்கிறான்? அவனை என்ன செய் தீர்கள்?'' என்று கேட்டான். அவன் எதுவும் கூறாது நிற்கவே, கஜவர்மன், ''வாயைத் திறந்து ஏதாவது சொல்லப் போகிறாயா அல்லது சித்திரவதைக்கு ஆளாகப் போகிறாயா?'', என்று அதட்டினான்.



ஜீவதத்தனோ, ''கஜா...! இவன் மட்டும் சொர்ணத்தைப் பற்றிய விவரங்களைத் தெரிவித்து விட்டால் இவனை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடலாம்'', என்றான். அப்போது அக்கொள்ளைக்காரன், ''அந்த விவரங்களைச் சொன்னால் உண்மையாகவே என்னை உயிருடன் விட்டுவிடுவீர்களா?'', என்று கேட்டான். ஜீவதத்தனும், ''ஆமாம். நீ எதையும் மறைக்காமல் கூறி விட்டால் உன்னை எதுவும் செய்யாமல் உயிருடன் விட்டுவிடுவேன்'', என்றான்.

அந்தக் கொள்ளைக்காரனும், ''அந்த சொர்ணம் பிடிபட்டதுமே 'காப்பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்' என்று கத்தினான். அதன் பிறகு அவனைக் கொண்டு சென்ற போதும் வழி நெடுக 'காப்பாற்றுங்கள்' என்று கத்திக் கொண்டே இருந்தான். அதனால் கோபம் கொண்ட எம் தலைவர் அவனை ஒரு சாக்குப் பைக்குள் போட்டுக் கட்டி சோளக் கதிர் மூட்டைகளோடு மூட்டையாக வைத்திருக்கிறார். இப்போது அந்த மூட்டை மற்ற சாமான்களோடு நதிக் கரை ஓரமாக வைக்கப்பட்டுள்ளது'', என்றான்.

ஜீவதத்தனும், ''நீ சொல்வது உண்மையா என்று சரிபார்க்க வேண்டும். அது உண்மை என்று தெரிந்த பிறகே உன்னை விட முடியும். அதுவரை உன்னை இந்த மரத்தில் கட்டி வைத்திருக்கப் போகிறேன். உன் வாயில் துணி திணிக்கப்பட்டு உனக்குக் காவலாக இவனையும் வைத்திருக்கிறேன்'', என்று எச்சரித்துவிட்டுச் சென்றான்.

ஜீவதத்தன் சற்று தூரத்திலிருந்த உயரமான மரத்தின் மீது ஏறிச் சுற்றிலும் பார்த்தான். கொள்ளைக் காரர்கள் தங்கியிருந்த இடமும், அவர்களது சாமான்கள் இறக்கி வைக்கப்பட்ட இடமும் அவனுக்குத் தெரிந்தன. அதைவிட அவன் கண்ட இன்னொரு காட்சி அவனை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. அவன், ''கஜா...! அங்கே பார்த்தாயா? ஒரு குகை வாசலில் அனல் கக்குவது போல ஒரு உருவம் தெரிகிறது. நீயும் மரத்தின் மீது ஏறிப் பார்'', என்றான். கஜவர்மனும் மரத்தின் மீதேறிப் பார்த்து, ''ஆமாம்...! ஒரு தீவட்டி எரிந்து கொண்டிருக்கிறது. அந்த

வெளிச்சத்தில் ஒரு பயங்கர உருவம் தெரிகிறது. அதை இன்னொரு பயங் கர உருவம் ஓங்கி, ஓங்கி அடித்துக் கொண்டிருக்கிறது'', என்றான்.

ஜீவதத்தனும், ''இது ஆச்சரியமாக இருக்கிறதே! ஒரு பயங்கர உருவம் மற்றொரு பயங்கர உருவத்தை அடிக் கிறது என்றால், அடிக்கும் உருவம், அடிபட்டுக் கொண்டிருக்கும் உரு வத்தை விட சக்தி வாய்ந்தது என்று தெரிகிறது. அது ஏன் அப்படி அடிக் கிறது என்று பார்க்கலாம்'', என்றான்.

கஜவர்மனும், ''இதுவரை இம் மாதிரி உருவங்கள் எதுவும் நம் கண் ணில் பட்டது இல்லை. இப்போது நாம் அவற்றைக் காண்கிறோம் என்றால், அது அதிசயம் தான்'', என்றான். ஜீவதத்தனும், ''கஜா...! இது காடு. காட்டில் எவ்வளவோ பொருள்கள் இருப்பது நமக்குத் தெரியவும் தெரியாது. நாம் காடு முழுவதையும் சுற்றிப் பார்த்தவர் களும் அல்ல'', என்றான்.

கஜவர்மனும், ''நீ சொல்வது சரி தான் ஜீவா...! இந்தக் காட்டில் திடீரென்று ஒட்டகங்களும், அந் நியப் பிரதேசவாசிகளும் வந்திருப் பதை இப்போது தானே காண்கிறோம். இந்த பயங்கர உருவங்களும் எங்கிருந்தாவது வந்து இங்கு மறைந்து கொண்டிருக்கலாம். காடு என்பது மரம், செடிகள் வளர்ந்து அடர்ந்து இருக்கும். ஒரு நகரமோ அல்லது கிராமமோ அல்ல. அதனால் இங்கு என்னவெல்லாம் இருக்கும் என்று சொல்லிவிட முடியாது. திடீர் திடீரென்று ஏதாவது தென்படுவதும், ஏதாவது நடப்பதும் இயல்பே. அத னால் இனி என்ன நடக்கப் போகிறது என்பதைப் பார்ப்போம்'', என்றான்.

அப்போது திடீரென பயங்கரக் குரலில் ஒரு பயங்கர உருவம் கத் தியது. அந்தக் குரலொலி காடெங் கிலும் எதிரொலித்தது. அந்த உருவம் மற்ற பயங்கர உருவத்தை அடித்து 'கொள்ளைக்காரர்கள் தங்கியுள்ள இடத்தைச் சுட்டிக் காட்டியது. அடி வாங்கிய அந்த பயங்கர உருவம் குகையிலிருந்து ஒரு குதி குதித்து, கொள்ளைக்காரர்கள் தங்கியிருந்த இடத்தை நோக்கி ஓடியது.

(தொடரும்)



ஒரு நாகரீகத்தின் உயரிய கட்டங்கள், பரம்பரை பரம்பரையாக, உண்மையைக் காண ஆய்வு

# 13. பரமார்த்த சாதனைக்கு வழி



சோமநாதர் வந்ததுமே சேகர், ''தாத்தா...! துருவன், கடவுளைக் கண்டது போல, நாமும் பிரார்த்தித்தால் கடவுளைக் காண முடியுமா?'' என்று கேட்டான். சோமநாதரும், ''இக்கேள்விக்குக் கடவுளை அறிந்து கொண்டவரால் தான், விடை அளிக்க முடியும். கடவுளைப் பற்றிப் படித்திருந்தாலே முடியும் என்பது தவறு. கடவுளைப் பற்றிப் படிப்பதற்கும், கடவுளை அறிந்து கொள்வதற்கு மிடையே மிகுந்த வித்தியாசம் உள்ளது. இவை இரண்டும் கடலின் எதிர்–எதிர்க்கரைகளைப் போன்றது. கடவுளைப் பற்றிப் படித்தவர்கள் ஏராளம். ஆனால், அவரை அறிந்து கொண்டவர்கள் மிக மிகக் குறைவு. ஏதோ ஓர் ஆசைக்காகக் கடவுளைப் பார்க்க வேண்டுமென்று நினைத்தால் அவர் தோன்றிவிட மாட்டார். நீருக்காக மீன்களும், காற்றிற்காக உயிரினங்களும் ஏங்குவது போல, மனிதன் கடவுளைக் காண்பதற்காக ஏங்க வேண்டும் என்று சித்தர்களும், ஞானிகளும் கூறுகிறார்கள். இதற்குப் பெரும் முயற்சி வேண்டும். இதற்கு எவ்வளவு காலம் பிடிக்கும் என்று வரையறுக்க முடியாது. சில சமயங்களில் பல பிறவிகள் எடுத்த பின்னரே அவரைக் காண முடியலாம்'', என்று கூறினார்.

சேகர், ''அப்படியா...!'' என ஆச்சரியத்துடன் கேட்கவே, சோமநாதரும் ''ஆமாம். துருவன் விஷயத்தையே எடுத்துக் கொள்வோம். அவன் முன் பிறப்பில் ஒரு பக்தனின் மகன். கடவுள் பக்தியில் மூழ்கி இருந்த அவன், ஒரு நாள் ஓர் அரசகுமாரனைப் பார்த்தான். ஒரு கணம் அவன் மனது, தானும் அந்த அரசகுமாரனைப் போல



இருந்தால் எவ்வளவு சுகபோகங்களை அனுபவிக்கலாம் என்று எண்ணியதால் அது நிறைவேறியது. ஆனால், அரசபோகம் நிலையற்றது என அறிந்து கொள்வதற்காகவே அவன் மறு பிறப்பில் அரசகுமாரனாகப் பிறந்தான்'', என்றார்.

அப்போது சேகர், ''துருவன் தன் முன்பிறப்பைப் பற்றி அறிந்திருந்தானா?'', என்று தன் தாத்தாவிடம் கேட்டான். அவரும், ''அவன் முதலில் அறிந்திராவிட்டாலும், பிறகு கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிந்து கொண்டான். வயதானவர்கள் சாதிக்க முடியாததைத் தான் சாதித்து எவருடைய சந்தேகத்தையும் போக்கும் சக்தி தனக்கு வந்துவிட்டதென அவன் பெருமைப்பட்டுக் கொண்டான். அவனோடு சென்ற முனிவர் சட்டென நின்று ஒரு மண்மேட்டைக் காட்டி, 'அந்த மரத்தின் கீழுள்ள மண்மேடு என்ன என்று தெரியுமா?' எனக் கேட்டார். அவனும் 'தெரியாது' எனவே, அவர் 'அதுதான் நீ அமர்ந்து தவம் செய்து உயிரை விட்ட இடம். நீ பல பிறப்புகளில் அவ்வாறு செய்தாய். நீ விட்டொழித்த எலும்புக் கூடுகளால் தான் அந்த மேடு உருவாகியுள்ளது' என்றார். அதுகேட்டு அவன் திகைத்தான். அவனது அகங்காரம் அழிந்தது. 'மனிதப் பிறவி எடுப்பது கடவுளின் கடாட்சத்தை அடையத் தான். இது தான் பரமார்த்த தர்மம்.'



ஆனால் இதை சாதிக்க ஒரு பிறப்பு போதாது. அதற்கு நீண்டகால முயற்சி வேண்டும் என்பதைத்தான் இக்கதை உணர்த்துகிறது'', என்றார்.

சோமநாதரின் மருமகள், ''கடவுளை அறிந்து கொண்ட பிறகும், அப்பக்தருக்கு அகங்காரமா?'', எனக் கேட்கவே சோமநாதரும், ''மனிதன் ஒரு விசித்திரப் பிறவி. முரண்பாடுகள் நிறைந்த பலரை நாம் பார்க்கிறோமே...! முட்டாளாகத் தென்படுபவன் திடீரென அறிவாளியாகிறான். அறிவாளியாகக் கருதப்படுபவன் முட்டாள் போல நடக்கிறான். இவர்களை போலத்தான் கடவுளை அறிந்தவர்களும் அகங்காரம் கொள்வது'' என்றார்.

''இது பற்றி கொஞ்சம் விளக்கிச் சொல்கிறீர்களா?'', என்று கேட்கவே



விளைவித்தார், திட்டினார். அவருக்கு அவமானம் விளைவிக்க முயன்று, தானே அவமானப்பட்டார். வசிஷ்டரின் புதல்வர்களையும் கொன்றார். ஆயினும், வசிஷ்டர் இவற்றை எல்லாம் சகித்துக் கொண்டு பொறுமையுடன் இருந்தார்.

விசவாமித்திரரின் கோபம் எல்லை மீறியது. 'முனிவர்களெல்லாம் போற்றிப் புகழும் வசிஷ்டர் தன்னை ஏன் மதிக்கவில்லை?' என்று கடும் கோபம் கொண்டார். வசிஷ்டர் மதிக்காத அவரை மற்றவர்களும் மதிக்கவில்லை. அதனால் விசுவாமித்திரரின் ஆத்திரம் அதிகரித்தது. தான் பிரம்ம ரிஷியாவதற்கு வசிஷ்டர் தான் முட்டுக்கட்டை போடுகிறார் என்று எண்ணி, வசிஷ்டரையே கொன்றுவிட்டால் பிரச்சினை தீர்ந்து விடும் என்று எண்ணி, வாளை எடுத்துக் கொண்டு, அவர் வசிஷ்டரின் குடிலுக்குச் சென்றார்.

அவர் அக்குடிலின் வாசலில் நின்று வசிஷ்டர் தம் மனைவி அருந்ததியுடன் பேசிக் கொண்டிருப்பதை ஒட்டுக் கேட்கலானார். அருந்ததி விசுவாமித்திரரை 'பிரம்ம ரிஷி' என அறிவிக்கும்படி தன் கணவர் வசிஷ்டரிடம் வேண்டலானாள். அவர் அதற்காகத் தன் நாட்டையே தியாகம் செய்ததையும் அவள் தன் கணவனுக்கு எடுத்துக் கூறினாள்.

வசிஷ்டரோ, ''அவர் தன் நாட்டைத் தியாகம் செய்தது பெரிதல்ல. அவரது நாட்டை விட அதிக மதிப்பான ஒன்றை விட்டுவிட வேண்டு

சோமநாதரும், ''ஆகா! வசிஷ்டர், விசுவாமித்திரர் ஆகிய இருவர் பற்றிக் கூறுகிறேன்'', என்று ஆரம்பித்தார்.

வசிஷ்டர் சாதுவானவர். கடவுளை அறிந்த பிரம்ம ரிஷி. வசிஷ்டரின் தவ வலிமையையும், திறமையையும் கண்டு மன்னராக இருந்த விசுவாமித்திரர் தன் நாட்டையே துறந்து, வசிஷ்டரைப் போலக் கடுந்தவம் செய்தார். வசிஷ்டர் தம்மை 'பிரம்ம ரிஷி' என்று அழைக்க வேண்டுமென்பதற்காக விசுவாமித்திரர் என்னென்னவோ எல்லாம் செய்து பார்த்தார். ஆனால், அவை எல்லாம் பயன் அளிக்காமல் போகவே, பொறாமையால் வசிஷ்டரையே அவர் வெறுத்தார். பொறாமையும், வெறுப்பும் ஒருவன் கண்ணை மறைத்துவிடும். வசிஷ்டருக்குப் பல இன்னல்களை

மென்று நான் விரும்புகிறேன். அவர் தனது அகங்காரமே உயர்வானது என்று நினைக்கிறார். அதை அவர் விட்டுவிட வேண்டும் என்பதைத் தான் நான் எதிர்பார்க்கிறேன். அவர் அகங்காரத்தை விட்டொழித்த மறு கணமே நான் அவரை 'பிரம்ம ரிஷி' என்று கூறிவிடுவேன். இப்போது அவரை நான் 'பிரம்ம ரிஷி' என்று கூறினால், அவர் தவம் செய்வதை நிறுத்திவிட்டு, மகிழ்ச்சி ததும்பத் திரிந்துக் கொண்டிருப்பார். அதனால் அவரது தவத்தைக் கெடுக்க நான் விரும்பவில்லை. அவர் சாதிக்க வேண்டியது இன்னமும் எவ்வளவோ உள்ளது. அவர் உண்மையான பிரம்ம ரிஷியாக ஆக வேண்டுமென்று தான் நான் விரும்புகிறேன்'', என்றார்.

இதை வெளியில் நின்று கேட்டுக் கொண்டிருந்த விசுவாமித்திரரின் கையிலிருந்த வாள் தானாகவே நழுவி விழுந்தது. தான் கொல்ல வந்த வசிஷ்டர், தன்னைப் பற்றி உயர்வாக எண்ணியதையும், அவரது பொறுமையையும் கண்டு, விசுவாமித்திரரின் மனம் மாறியது. அக்குடிலுக்குள் உடனே சென்று மரியாதையுடனும், பயபக்தியுடனும் வசிஷ்டரின் கால்களில் விழுந்து வணங்கினார். அதன் பின் விசுவாமித்திரரிடம் பெரும் மாறுதலே தென்பட்டது. அவர் கடுந்தவம் செய்து பிரம்ம பலத்தை அடைந்தார். அதனால் வசிஷ்டர் வாயாலேயே 'பிரம்ம ரிஷி' என்ற பட்டத்தையும் பெற்றுவிட்டார்.

வசிஷ்டர் கூறியது, அது விசுவாமித்திரரின் மனதில் நன்கு பதிந்தது. அதனால் அவர் அகங்காரத்தை விட்டொழித்து தவம் புரிந்து சாதனை நிகழ்த்தி முடிவில் வசிஷ்டர் வாயாலேயே 'பிரம்ம ரிஷி' எனக் கூறக் கேட்டு அவர் அகமகிழ்ந்தார்.

சோமநாதர் இக்கதையைக் கூறவே சேகரும், ''தாத்தா...! நீங்கள் சொன்ன கதையிலிருந்து மனிதன் முதலில் தன்னை நன்கு புரிந்து கொள்ள வேண்டும் என்பதைத் தெரிந்து கொண்டோம்'' என்றான். *(தொடரும்)*



# கௌரவப் பிரச்சினை!

சங்கர் தான் விரும்பிய அழகானவளும், கெட்டிக்காரியுமான, சாதாரணக் குடும்பத்துப் பெண்ணான கீதாவை மணந்து கொண்டான். வரதட்சனையே இல்லாமல் தன் வீட்டிற்கு வந்த தன் மருமகள் கீதாவை, சங்கரின் தாயார் மீனாட்சி தன் மனதிற்குள் திட்டி வெறுத்து வந்தாலும், ஊரில் எல்லோரிடமும் தான் ஒரு பைசா கூட வரதட்சணை என்று வாங்காமல் தன் மகன் சங்கருக்குக் கல்யாணம் செய்து வைத்ததாகப் பெருமை பேசி வந்தாள்.

பொங்கல் பண்டிகைக்கு முன் கீதாவைக் காண அவளது தங்கை சீதா வந்திருந்தாள். பண்டிகைக்கு வந்திருப்பதால் சீதாவுக்கு ஒரு புடவை வாங்கிக் கொடுக்க வேண்டுமென்று சங்கரும், கீதாவும் தீர்மானித்தார்கள். ஆனால் அதைக் கேட்டால் தன் தாய் எரிமலையாக வெடிப்பாளே என்று சங்கர் பயந்தான். அப்போது கீதா தன் மாமியாரைச் சமாளிக்க ஒரு வழியைச் சங்கரிடம் கூறவே, அவனும் அதன்படியே செய்வதாகக் கூறினான்.

மறுநாள் அலுவலகத்திலிருந்து மாலையில் வீட்டிற்கு வந்த போது சங்கர் ஒரு நல்ல பட்டுப்புடவையை வாங்கிக் கொண்டு வந்திருந்தான். அப்போது அவன் தாய் மீனாட்சி அடுத்த வீட்டுக் காமாட்சி அம்மாளுடன் பேசிக் கொண்டிருந்தாள். அவளருகே கீதாவும், சீதாவும் நின்று கொண்டிருந்தனர். சங்கர் அங்கு போய் தன் தாயாரிடம், ''அம்மா...! பொங்கலுக்கு கீதா தனக்குப் புடவை வாங்கித் தர வேண்டாமென்று கூறிவிட்டாள். ஏனெனில் அவள் தகப்பனார் வாங்கிக் கொடுத்த புடவை ஒன்று புதிதாக இருக்கிறதாம். உனக்கு ஒரு புடவை வாங்கி வந்திருக்கிறேன்'' என்றான்.

மீனாட்சி அம்மாள் ஏதோ சொல்ல ஆரம்பிக்கும்போதே காமாட்சி அம்மாள் குறுக்கிட்டு, ''ஆகா...! மருமகள் என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும். மகன் மாத்திரம் குறைச்சலா? உனக்குப் புடவை வாங்கி வந்திருக்கிறான், பார் ! நீகொடுத்து வைத்தவள். ஆமாம். உன் மருமகளின் தங்கை சீதா வந்திருக்கிறாளே. அவளுக்கு நீ ஒரு புடவை வாங்கிக் கொடுத்தால் தானே மரியாதையாக இருக்கும்'', என்றாள்.

மீனாட்சியும், ''ஆமாம். சங்கரிடம் சொல்லலாமென்று இருந்தேன். மறந்து விட்டேன். அதனால் என்ன? சங்கர் வாங்கி வந்த புடவையை சீதாவுக்குக் கொடுத்து விடுகிறேன். என்னிடமும் ஒரு புதுப் புடவை இருக்கிறது'', என்று கூறி சங்கரிடமிருந்து புடவையை வாங்கி சீதாவிடம் கொடுத்துத் தன் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொண்டதாக எண்ணிப் பெருமையுடன் காமாட்சி அம்மாளைப் பார்த்தாள்.



# இருபதாம் நூற்றாண்டில் இந்தியா

## அண்டை நாடுகளுடன் போரும், சமாதானமும்—1951–1976

சுதந்திர இந்தியாவின் முதலாவது அமைச்சரவை இரண்டாவது உலகப் போரினாலும், நாட்டின் பிரிவினையாலும் ஏற்பட்ட பொருளாதாரச் சீர்குலைவை சீர்திருத்தி நிலைநிறுத்துவதற்கு முதலிடம் அளித்தது.

ஜூலை 1951ல் திட்டக் கமிஷன் முதலாவது ஐந்தாண்டு திட்டத்தை அறிவித்தது. அத்திட்டம் தேசிய வருமானத்தையும், வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், உணவு தானியங்கள், கச்சாப் பொருள்கள் ஆகியவற்றின் உற்பத்தியை அதிகரிக்கவும், வேலை வாய்ப்புகளைப் பரவலாக்கவும் வழி வகுத்தது. விவசாயத்திற்கு முதலிடம் அளித்தது. திட்டக் கமிஷனின் தலைவர் நேரு, துணைத் தலைவர் பேராசிரியர் பி.சி. மகாலநோபிஸ்.



இந்தியாவும், பாகிஸ்தானும் கஷ்மீரில் போரை நிறுத்தத் தீர்மானித்தாலும், அச்சமஸ்தானத்தின் 'நேஷனல் கான்ஃபரன்ஸ்' அதற்குத் தனி அரசியல் நிர்ணய சட்டம் வேண்டுமெனக் கோரியது. பிரிட்டனும், அமெரிக்காவும் ஐ.நா.வின் ஆதரவுடன் அச்சமஸ்தானம் இந்தியாவுடன் இணைந்து விட வேண்டுமென்று கூறின. ஆனால் ஆக்கிரமிப்பு செய்த பாகிஸ்தான் முதலில் அச்சமஸ்தானத்தை விட்டு வெளியேற வேண்டுமென்று வலியுறுத்தியது. அதன் மன்னர் தேர்தல்களை அறிவித்தார். 75 உறுப்பினர்களைக் கொண்ட சட்டமன்றத்தை அமைக்க இந்தியா இணங்கியது. நேஷனல் கான்ஃபரென்ஸின் 75 வேட்பாளர்களும் எதிர்ப்பின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அச்சட்டமன்றம் 1951 அக்டோபர் 31ல் முதலில் கூடியதும் அச்சமஸ்தானம் இந்தியாவுடன் இணைந்ததை அங்கீகரித்தது.

நாட்டின் முதலாவது பொதுத் தேர்தல்களுக்கான நடைமுறைகள் 1951ல் ஆரம்பமாகி 1952 பிப்ரவரியில் முடிவுற்றன. மக்களவையின் 489 இடங்களுக்கும், மாநிலங்களின் சட்டமன்றங்களின் 3823 இடங்களுக்கும் 22 மாகாணங்களில் தேர்தல்கள் நடைபெற்றன. 75 கட்சிகள் 175 வேட்பாளர்களை நிறுத்தின. சுயேச்சைகளாக 6000 பேர்கள் நின்றனர். இந்திய தேசிய காங்கிரஸ் 363 இடங்களைப் பெற, கம்யூனிஸ்ட் கட்சி மற்றவர்களுடன் சேர்ந்து 41 இடங்களைப் பெற்று பிரதான எதிர்க்கட்சியாக நாடாளுமன்றத்தில் இருந்தது. ஜவாஹர்லால் நேரு பிரதம மந்திரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

# மொழிவாரி மாநிலங்கள்

டாக்டர் ராஜேந்திர பிரசாத் இந்திய அரசின் தலைவராகவும், டாக்டர். ராதா கிருஷ்ணன் துணைத் தலைவராகவும் மே 6ல் தேர்ந்தெடுக்கப் பட்டனர். நாடாளு மன் றம் மே 12ல் கூடி ஜி.வி.மாவ்லாங்கரை முதலாவது சபாநாய கராகத் தேர்ந்தெடுத் தது. இதற்கு முன் மார்ச் 27ல் 216 உறுப்பினர்களைக் கொண்ட மாநிலங் கள் அவை அமைக்கப்பட்டது காங் கிரஸ் கட்சி 18 மாகாணங்களில் அமைச் சரவைகளை அமைத்தது.


டாக்டர் ராஜேந்திர பிரசாத்

ஜெயப்பிரகாஷ் நாராயண் தலைமை யில் 1952 மே-யில் சோஷலிஸ்ட் கட்சி உருவானது. இது காந் தீய வழியைப் பின்பற் றத் தீர்மானித்தது. இதன் கொள்கை களும், கிசான் மஜ்தூர் கட்சியின் கொள்கை களும் ஒன்று போல இருந்ததால், இரு கட்சிகளும் இணைந்து 'பிரஜா சோஷலிஸ்ட் கட்சி' என்று பெயர் வைத்துக் கொண்டன. பம்பாயில் இக்கட்சி கிருபலானியைத் தலைவரா கத் தேர்ந்தெடுத்தது. இந்தக் கட்சியின் அமைப்பு உறுப்பினர்கள் ஜெயப் பிரகாஷ் நாராயண், ஆசார்ய நரேந்திர தேவ், ராம் மனோஹர் லோஹியா, அசோக் மேஹ்தா ஆகியோர் ஆவர்.


ஜெயப்பிரகாஷ் நாராயண்

மொழிவாரி மாநிலம் வேண்டு மென்று கோரிக்கை வைத்து ஆந்திர மாநிலம் வேண்டுமென்று பொட்டி ஸ்ரீராமுலு உண்ணாவிரதம் மேற்கொண் டார். அவர் டிசம்பரில் இறக்கவே, மதராஸ் மாகாணத்திலிருந்து 11 மாவட் டங்களைத் தனியே பிரித்து 1953 அக் டோபரில் தனி ஆந்திர மாநிலத்தை உருவாக்கினார்கள். அதன் தலைநகர் கர்நூல். 1956ல் மாநிலங்கள் சீரமைக்கப் பட்டபோது இந்த ஆந்திர மாநிலத் துடன் ஹைதராபாத் சமஸ்தானத்தின் 8 மாவட்டங்களைச் சேர்த்து ஹைதரா பாத்தை அதன் தலை நகராக்கினார்கள்.

கஷ்மீரில் அரசியல் நிலை சிக்கலாயிற்று. 1953 மே மாதம் கூடிய நேஷனல் கான்ஃபரென்ஸில் ஷேக் அப்துல்லா வின் கொள்கை களை எட்டு தலை வர்களில் ஏழு பேர் கள் எதிர்த்தார்கள். ஷேக் அப்துல்லா ரக சியமாகப் பாகிஸ்தானுடன் பேச்சு வார்த்தை நடத்தியதாக அவர்கள் குற் றம் சாட்டினார்கள். அவரை சதர். ஏ.ரியாசத் (மாநில ஆளுநர்) பதவி நீக்கம் செய்து பக்ஷிகுலாம் முகம்மதை முதலமைச்சராக்கினார். ஷேக் அப் துல்லா கைது செய்யப்பட்டார்.


ஷேக்அப்துல்லா

சீன இந்திய உடன்படிக்கை வர லாற்றுச் சிறப்புமிக்கது. இது பஞ்சசீலக் கொள்கையில் ஏற்பட்டது. அவரவரது பிரதேச உரிமையை மதித்தல், ராணுவ மோதல்களைத் தவிர்த்தல், உள்நாட்டு விவகாரங்களில் தலையிடாமை, இரு நாடுகளும் சம அந்தஸ்தில் ஒத்துழைத்

தல், சமாதான முறையில் வாழ்தல் என்பன. இரு நாடுகளும் ஒப்புக் கொண்ட ஐந்து அடிப்படைக் கொள்கைகளே இவை. இந்த உடன் படிக்கையில் நேருவும், சீனப் பிரதமர் சூ-என்-லாயும் *1954* ஜூன் *26*ல் கையொப்பமிட்டார்கள்.

பாண்டிச்சேரி என்ற மாநிலம் ஃபிரான்ஸ் தன் வசமிருந்த புதுச் சேரி, மாஹி, ஏனாம், காரைக்கால் பகுதிகளை *1954* நவம்பர் *4*ல் இந் தியாவிடம் ஒப்படைத்ததால் ஏற் பட்டது. இப்பகுதி மத்திய அரசால் நிர்வகிக்கப்பட்ட யூனியன் பிரதே சம். இதற்கான உடன்படிக்கை *1956* மே *28*ல் தான் கையொப்பமிடப் பட்டது.



★ குடியரசுத் தலைவர் ராஜேந்திர பிரசாத் 1951 மே 11ல் புதிதாகக் கட்டப்பட்ட சோமநாதர் ஆலயத்தைத் திறந்து வைத்தார்.

★ முதலாவது ஆசிய விளையாட்டுப் போட்டிகள் புது டில்லியில் 1951 மார்ச் 4ல் ஆரம்பமாகியது. இதில் 11 நாடுகளைச் சேர்ந்த 490 விளையாட்டு வீரர்கள் கலந்து கொண்டார்கள். ஜப்பான் அதிகப் பதக்கங்களைப் பெற்று முதலாவது இடத்தைப் பெற்றது. அடுத்த இடம் இந்தியா அடைந்தது.

★ முதலாவது மக்கள் தொகைக் கணக் கெடுப்பு 1951ல் எடுக்கப்பட்டது. அப் போது நம் நாட்டின் மக்கள்தொகை 75 கோடி என்பது தெரிய வந்தது.

# உலகின் மற்ற பகுதிகளில்...

◆ மனிதன் விண்வெளியில் முதலில் வெற்றி கண்டது 1957 அக்டோபர் 4ல் செயற்கைக் கோளை அனுப்பிய தன் வாயிலாகத்தான். ஸ்புட்னிக்-1 என்ற இந்த ரஷ்ய செயற்கைக் கோள் உலகைச் சுற்றி விண்வெளியில் சென்றது. நவம்பர் 3ல் ஸ்புட்னிக்-2 என்ற செயற்கைக் கோளில் லைகா என்ற நாய் பயணம் செய்தது. அமெரிக்கா வான்கார்ட் என்ற ராக்கெட்டைச் செலுத்தவே அது விண்வெளியில் வெடித்துப் போயிற்று. இதனால் மனம் தளராமல் எக்ஸ்ப்ளோரர் -1 என்ற கோளை அமெரிக்கா டிசம்பரில் அனுப்பியது.

◆ டென்னிஸ் தி மெனஸ் என்ற காமிக்ஸ் சித்திரங்கள் முதன் முதலில் அமெரிக்கப் பத்திரி கைகளில் 1951 டிசம்பரில் வெளியிடப்பட்டன.

◆ ரோஜர் பானிஸ்டர் என்ற ஆக்ஸ் ஃபோர்டு பல்கலைக் கழக மாணவர் 1954 மே 6ல் ஒரு மைல் தூரத்தை (3.59.4) 4 நிமிடங்களில் ஓடினார்.

◆ டிஸ்னிலாண்ட் அமெரிக்கா ஆன் ஹீமில் பொதுமக்கள் காண 1955 ஜூலை 18 முதல் திறந்துவிடப்பட்டது.

# சோஷலிஸ்ட் அமைப்பு சமுதாயம்

சென்னையில் 1955 ஜனவரியில் நடந்த இந்திய தேசிய காங்கிரஸ் சோஷலிஸ அமைப்பு சமுதாயத்தை அமைக்கப் பாடுபடுவதாக அறிவித்தது. ஆந்திரத் தேர்தலில் சுற்றுப்பயணம் செய்த பிரதமர் நேருவும், சோஷலிஸத்தை இந்தியா முழுவதும் பரப்பப் போவதாக அறிவித்தார்.

உலக வல்லரசுகளில் இரண்டாவதான ரஷ்யாவுடன் அரசாங்க உறவுகளை இந்தியா வைத்துக் கொண்டு உடன்படிக்கை செய்து கொண்டது. பிரதமர் நேரு 1955 ஜூனில் ரஷ்ய அரசாங்க அழைப்பின் பேரில் அந்நாட்டிற்குச் சென்றார். பதினைந்து நாட்கள் சுற்றுப் பயணம் செய்த பின் அவர் ரஷ்யாவுடன் பஞ்சசீலக் கொள்கை அடிப்படையில் உடன்படிக்கை செய்து கொண்டார். இதை உறுதிப்படுத்தும் விதத்தில் ரஷ்யத் தலைவர் புல்கானினும், ரஷ்யப் பிரதமர் க்ருஷேவும், நவம்பரில் இந்தியாவிற்கு வருகை தந்தனர்.

மாநிலங்களைச் சீரமைக்க 1953ல் அமைக்கப்பட்ட கமிஷன் தனது அறிக்கையை 1955 செப்டம்பர் 30ல் சமர்ப்பித்தது. பெரும்பாலானோர் பேசும் 16 மொழி அடிப்படை மாநிலங்களை அமைக்க அது பரிந்துரை செய்தது. இதன்படி 1956 நவம்பர் 1ல் அஸ்ஸாம், ஆந்திரா, உத்திரப் பிரதேசம், பம்பாய், பஞ்சாப், மேற்கு வங்காளம், மத்தியப் பிரதேசம், ஜம்மு-கஷ்மீர், பீஹார், ஒரிஸ்ஸா, ராஜஸ்தான், மதராஸ், மைசூர், கேரளா என்ற மாநிலங்களும் யூனியன் பிரதேசங்களாக டில்லி, அந்தமான்-நிகோபார், லக்ஷத் தீவுகள், திரிபுரா, மணிப்பூர் என்பனவும் அமைந்தன.

உலகில் முதலில் தேர்ந்தெடுக்கப்பட்ட கம்யூனிஸ்ட் அரசாங்கம் 1957ல் கேரளாவில் அமைந்தது. இம்மாநில சட்டமன்றத்தின் 126 தொகுதிகளில் 60 தொகுதிகளைக் கம்யூனிஸ்ட் கட்சி வென்று 5 சுயேட்சை உறுப்பினர்களின் ஆதரவுடன் அக்கட்சி அரசாங்கத்தை அமைத்தது. காங்கிரஸ் கட்சிக்கு 43 இடங்களே கிடைத்தன. முதலமைச்சராக ஈ.எம்.எஸ்.நம்பூதிரிபாட் பதவி ஏற்றார்.


ஈ.எம்.எஸ். நம்பூதிரிபாட்

பஞ்சாயத்துராஜ் முறை என்ற ஜனநாயக முறை கிராமங்களின் நிர்வாகத்திற்கு 1957ல் அறிமுகப்படுத்தப் பட்டது. இதனை வழிநடைப் படுத்திய முதலாவது மாநிலங்கள் ஆந்திரப் பிரதேசமும், ராஜஸ்தானமும் ஆகும்.

கஷ்மீர் பிரச்சினை மீண்டும் தலை தூக்கியது. 1958ல் ஷேக் அப்துல்லா விடுதலை செய்யப்பட்டார். அவர் 'பிளிபிசிட்' ஃபிரண்டிற்குத் தலைமை ஏற்று கஷ்மீர் இந்தியாவுடன் இணைந்ததை ரத்து செய்யக் கோரினார். ஷேக் அப்துல்லா நாட்டுத் துரோகக் குற்றத்திற்காக மீண்டும் கைது செய்யப் பட்டார்.

பாகிஸ்தான் இக்குழப்ப நிலையைப் பயன்படுத்தி ஊடுறுவல்களை ஆரம்பித்தது.

இதே சமயம் சீனாவும் இந்தியாவிற்குத் தொல்லை கொடுக்கலாயிற்று. இதற்குக் காரணம் திபெத் மதத்தலைவர் தலாய் லாமா அங்கிருந்து சிறைப்படாமல் தப்பி இந்தியாவிற்கு ஓடிவந்து விட்டது தான்.

★ இந்திய மூவர்ணக் கொடி உலகின் மிக உயரமான இமயத்தின் எவரெஸ்ட் சிகரத்தில் நியூஜிலாந்தின் எட்மண்ட் ஹிலேரியாலும் இந்தியாவின் டென்சிங் நார்கேயாலும் நாட்டப்பட்டது. இது 1953 மே 29ல் நிகழ்ந்தது. அங்கு இந்திய தேசியக் கொடியுடன் பிரிட்டன், நேபாளம், ஐ.நா. ஆகியவற்றின் கொடிகளும் பறந்தன.

★ இந்திய அரசாங்கம் பாரத ரத்னா, பத்ம விபூஷண், பத்ம பூஷண், பத்ம ஸ்ரீ விருதுகளை 1954ல் ஏற்படுத்தி முதல் பாரத ரத்னா விருதுகளை சி. ராஜகோபாலாச்சாரியாருக்கும், டாக்டர். எஸ். ராதாகிருஷ்ணனுக்கும், சி.வி. ராமனுக்கும் அளித்தது.



★ சத்யஜித் ரேயின் திரைப்படம் 'பதேர் பாஞ்சாலி' 1955ல் நியூயார்க்கில் காட்டப்பட்டது. அது திரைப்பட உலகில் ஒரு சிறப்பிடம் பெற்றது.

## உலகின் மற்ற பகுதிகளில்...

◆ அமெரிக்கா 1959 மே-யில் செயற்கைக் கோளை வெற்றிகரமாக வான வெளியில் அனுப்பி, பூமியைச் சுற்றி வரச் செய்தது. அதில் இரு குரங்குகள் 360 மைல் உயரத்தில் 1700 மைல் தூரம் சுற்றி வந்தன.

◆ சோவியத் விண்வெளிக் கப்பல் லூனிக்-2 சந்திரனில் 1959 செப்டம்பர் 4ல் இறங்கியது. அங்கு 35 மணி நேரம் இருந்து அங்குள்ள சுற்றுப்புற நிலவரங்கள் பற்றிய விவரங்களை அனுப்பியது.

◆ நியூயார்க்கின் வில்லியம் ஹிக்கின்பாதம் 1958ல் வீடியோ விளையாட்டுகளைக் கண்டு பிடித்தார். டேபிள் டென்னிஸ் 'பாங்க்' எனப்பட்ட விளையாட்டை வர்த்தக ரீதியாக்க 14 ஆண்டுகள் பிடித்தன.

◆ உலகக் கால்பந்துப் போட்டியில் அளிக்கப்பட வேண்டிய கோப்பை வெஸ்ட்மினிஸ்டர் ஹாலிலிருந்து 1966 மார்ச் 20ல் திருடப்பட்டு விட்டது. ஒரு வாரத்திற்குப் பின் ஒரு நாய் அதை ஒரு கால்வாயில் கண்டு பிடித்து வெளியே எடுத்துப் போட்டது.

# கோவா விடுதலை பெற்றது

தலாய் லாமா 1959 மார்ச் 17ல் திபெத்திலிருந்து வெளியேறி, பதினைந்து நாட்களுக்குப் பின் இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். தலாய் லாமாவையும், அவரைப் பின்பற்றியவர்களையும் இந்தியா வரவேற்று அடைக்கலம் அளித்து உத்திரப் பிரதேசத்தில் அவர்கள் தங்க வசதிகளைச் செய்து கொடுத்தது. இந்த மனிதாபிமானச் செயலுக்கு சீனா ஆட்சேபித்துத் தன் உள்விவகாரங்களில் இந்தியா தலையிடுவதாகக் கூறி லடாக்கிலிருந்து அகாய்சீன் வரை 132,900 ச. மைல் பரப்பு நிலத்தைத் தன்வசமுள்ள வரைபடத்தில் காட்டி வெளியிட்டது. இந்தியா இதை ஆட்சேபித்துப் பேச்சு வார்த்தைகளை நடத்தியது.


தலாய் லாமா

முதிய காங்கிரஸ் தலைவர் சி. ராஜகோபாலாச்சாரியார் சுதந்திரக் கட்சி என்னும் புதிய கட்சியை ஆரம்பித்தார். நேரு அரசாங்கத்தின் நிலச் சீர்திருத்த, விவசாயக் கொள்கைகளை இக்கட்சி எதிர்த்தது. இக்கட்சியில் பல வலதுசாரி காங்கிரஸ்காரர்கள், பண்ணையார்கள், முன்னாள் சமஸ்தான மன்னர்கள் என்று சுமார் 750 பேர்கள் 11 மாநிலங்களிலிருந்து வந்து கூடினர்.


சி. ராஜகோபாலாச்சாரியார்

பம்பாய் மாகாணத்தை மகாராஷ்டிரம், குஜராத் என இரு மாநிலங்களாகப் பிரிக்க வேண்டுமென்ற கிளர்ச்சி வலுத்தது. பம்பாய் சட்டமன்றத்தில் 1960 மார்ச் 18ல் பம்பாய் மாகாண சீரமைப்பு மசோதா ஒருமனதாக நிறைவேறியது. மே 1ல் மகாராஷ்டிரம், குஜராத் என்ற மாநிலங்கள் ஏற்பட்டதாக அறிவிக்கப்பட்டது. மகாராஷ்டிரத்தின் தலைநகர் பம்பாய். குஜராத்தின் தலைநகர் அகமதாபாத்.

சீன இந்தியப் பேச்சு வார்த்தைகளுக்கு இரண்டாவது முறையாக சீனப் பிரதமர் சூ-என்-லாய் இந்தியாவிற்கு வந்தார். சீனா ஆக்கிரமித்த பகுதியைக் கொடுக்க மறுத்ததை ஆளும் கட்சியும், எதிர்க் கட்சிகளும் கடுமையாக எதிர்த்ததோடு ஒப்புக் கொள்ளவும் இல்லை. 1960ல் இந்திய ராணுவ அமைச்சர் வி.கே. கிருஷ்ண மேனனும், சீனாவின் அயல்நாட்டு விவகார அமைச்சருக்குமிடையே நடந்த பேச்சுவார்த்தைகளுக்கு இந்தியக் கட்சிகள் எதுவுமே ஒப்புதல் அளிக்கவில்லை. சீனா தான் ஆக்கிரமித்த பகுதிகளைத் திருப்பிக் கொடுக்க மறுத்தது.

இந்திய ராணுவம் 1961 டிசம்பர் 18ல் போர்த்துக்கீசியர் வசமிருந்த கோவா, டையு, டாமன் பகுதிகளை மீட்டு அந்நிய ஆட்சியிலிருந்து விடுதலை பெறச் செய்தது. இம்மூன்று பகுதிகளும் சேர்ந்து கோவா என்ற யூனியன் பகுதியாயிற்று. காலனி ஆதிக்கம் ஒழிய வேண்டும் எனக் கூறி நேரு இந்த ராணுவ நடவடிக்கையை நியாயப்

படுத்தினார்.

மூன்றாவது பொதுத் தேர்தல் 1962 பிப்ரவரியில் நடந்ததில் மத்தியிலும், பல மாநிலங்களிலும் காங்கிரஸ் கட்சி ஆட்சியைத் தக்க வைத்துக் கொண்டது. நாடாளுமன்றத்தில் அது 361 இடங்களைப் பெற, 29 இடங்களைப் பெற்ற கம்யூனிஸ்ட் கட்சி பிரதான எதிர்க் கட்சியாக வந்தது. மாநிலங்களில் காங்கிரஸ் 2842 இடங்களில் 1759 இடங்களைப் பெற்றது. கம்யூனிஸ்ட் கட்சி 153 இடங்களையும், சுதந்திரா கட்சி 166 இடங்களையும், ஜன சங்கம் 116 இடங்களையும் பெற்றன. நேரு ஏப்ரல் 10ல் மீண்டும் பிரதம மந்திரியானார்.

★ இந்தியாவின் முதலாவது அணுசக்தி நிலையம் அப்சரா 1957 ஜனவரி 20ல் ஆரம்பிக்கப்பட்டது.



★ இந்தியா தசம முறையை 1957 ஏப்ரல் 1 முதல் கடைப்பிடிக்கலாயிற்று. நாணயங்களில் மிகச் சிறிய மதிப்பு நயா பைசா.

★ நேருவின் பிறந்த தேதியான நவம்பர் 14ஐ குழந்தைகள் தினமாகக் கொண்டாடத் தீர்மானிக்கப்பட்டது.

★ தாரா செரியன் தான் மேயர் பதவி வகித்த முதல் பெண்மணி. இவர் 1957ல் சென்னை மேயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## உலகின் மற்ற பகுதிகளில்...

◆ உலகில் பிரதம மந்திரிப் பதவியை வகித்த முதல் பெண்மணி ஸ்ரீலங்காவின் சிரிமாவோ பண்டார நாயகே. இவர் 1960 ஜூன் 21ல் அந்நாட்டுப் பிரதம மந்திரி ஆனார்.

◆ விண்வெளியில் 1961 ஏப்ரலில் ரஷ்யாவின் யூரிககாரின் வாஸ்டோக்-1 என்ற விண்வெளிக் கலத்தில் 190 மைல் உயரம் சென்று அங்கு ஒரு மணி 48 நிமிட நேரம் நடந்து விட்டு ஏப்ரல் 12ல் பூமிக்குத் திரும்பி வந்தார். அடுத்த மாதம் அமெரிக்கா ஆலன் ஷெப்பர்ட் என்ற விண்வெளி வீரரை ஃப்ரீடம்-7 என்ற விண்வெளிக் கலத்தில் அனுப்பியது, ஜூலையில். விர்ஜின் கிரஹாமும் ஆகஸ்டில் ஹெர்மன்டிடாவும் விண்வெளிக்குச் சென்று 24 மணி நேரம் அங்கு இருந்து விட்டுத் திரும்பி வந்தனர்.

◆ தென் ஆப்பிரிக்காவில் டாக்டர். கிருஸ்டியன் பர்னார்ட் கேப்டவுனில் இருதய மாற்றுச் சிகிச்சையை வெற்றிகரமாக 1967 டிசம்பரில் 3ல் செய்தார். இவருக்கு 30 டாக்டர்களும் செவிலியர்களும் உதவியாக இருந்தனர். புதிய இருதயம் பொருத்தப்பட்டவர் சிகிச்சைக்குப் பின் 18 நாட்கள் உயிருடன் இருந்து பின்னர் நியுமோனியா ஜுரத்தால் இறந்து போனார்.

# நேரு சகாப்தம் முடிந்தது

இந்தியா 1962ல் சீனாவுடன் போர் புரிய ஈடுபடுத்தப்பட்டது. 1959ல் திபெத்தை தன் நாட்டுடன் சேர்த்துக் கொண்டபின் சீனா இந்தியப் பகுதி களைத் தன் வசப்படுத்தலாயிற்று. 1962 மே-ஜூனில் அது ஜம்மு-கஷ்மீரில் லடாக் பகுதிக்குள் நுழைந்தது. பாகிஸ் தான் கில்கட்டின் ஒரு பகுதியைச் சீனாவுக்குக் கொடுத்து நட்புறவு கொண் டது. இவற்றை இந்தியா ஆட்சேபித் தது. ஆனால் சீனா தனக்கும், இந்தியா விற்கும் எல்லை பற்றி எவ்வித ஒப் பந்தமும் இல்லை எனக் கூறி இந்திய ஆட்சேபணையை நிராகரித்தது. இது 1965ல் அறிவிக்கப்பட்ட பஞ்சசீலக் கொள்கைக்கு நேர்மாறாக இருந்தது.

அக்டோபர் 20ல் வடகிழக்கு எல்லை யில் சீனப்படை வீரர்கள் 30,000 பேர்கள் அக்சாய்சீன் பகுதியில் நுழைந்து அஸ் ஸாமை நோக்கி வந்தனர். கடுங்குளிர் காரணமாக அவர்களை எதிர்த்து விரட்ட முடியவில்லை. அவசர நிலை பிரகட னப்படுத்தப்பட்டது. இராணுவ மந்திரி வி.கே. கிருஷ்ண மேனனை ராஜிநாமா செய்ய வைத்து நேரு அந்த இலாகாவை எடுத்துக் கொண்டார். அமெரிக்கா, பிரிட்டன், கென்யா, மேற்கு ஜெர்மனி, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகள் இந் தியாவுக்கு ஆயுதங்கள் கொடுத்தன. இதனால் சீனப்படை எடுப்பை இந்தியா தடுத்து நிறுத்தியது. நவம்பர் 21ல் சீனா போர் நிறுத்தம் அறிவித்தது. ஸ்ரீலங்கா, பர்மா, கம்போடியா, இந்தோனேசியா, கானா, ஐக்கிய அரபு குடியரசு ஆகிய நாடுகள் கொழும்பில் கூடித் தீர்மானித் ததை இந்தியா ஏற்றது. ஆனால் சீனா நிராகரித்தது. போர் நின்ற போது சீனாவிடம் இந்தியப் பகுதிகளான லடாக்கின் 36,000 சதுர கிலோ மீட்டரும் வடகிழக்கு எல் லையில் 5180 சதுர கிலோ மீட்டரும் சீனாவின் வசம் இருந் தன.


காமராஜ்

தமிழ்நாட் டின் முதல மைச்சரும், முதிய காங்கிரஸ் தலைவருமான காமராஜ் தொடர்ந்து 10 ஆண்டுகளுக்கு மேல் பதவியிலுள்ள காங்கிரஸ்காரர்கள் பதவி விலக வேண்டுமென்று ஒரு திட்டம் கொண்டு வந்தார்.

1963 ஆகஸ்ட் 10ல் அறிவிக்கப்பட்ட இத்திட்டப்படி அவரே முதலில் ராஜி நாமா செய்தார். அவரைத் தொடர்ந்து மொரார்ஜி தேசாய், ஜெகஜீவன்ராம் ஆகியோரும் மற்றும் நான்கு அமைச்சர் களும் பதவி விலகினர். ஐந்து மாநில முதலமைச்சர்களும் பதவி விலகினர்.

இந்திய அரசியலில் வரலாற்றுச் சிறப்பு படைத்த நேரு சகாப்தம் 1964 மே 27ல் அவர் இறந்ததால் முடிவிற்கு வந் தது. புவனேஸ்வர் காங்கிரஸின் போது திடீரென நோய்வாய்ப்பட்டு டேரா டூனுக்குச் சென்று ஓய்வெடுத்தார்.

மே 26ல் டில்லி வந்து அரசாங்க வேலையைக் கவனிக்கத் தொடங்கிய போது மே 27ல் காலமானார்.

1955ல் அவருக்கு 'பாரத ரத்னா' பட்டம் கொடுக்கப்பட்டிருந்தது. அவருக்குக் குழந்தைகளிடம் மிகவும் பிரியம். அதனால் அவர் 'மாமா நேரு' என அழைக்கப்பட்டார்.

★ கல்கத்தாவின் மிஹிர் சென் இங்கிலீஷ் கால்வாயை 1958 செப்டம்பர் 27ல் 14 மணி 45 நிமிடங்களில் நீந்திக் கடந்தார். 34 கி.மீ. தூரமுள்ள டோவருக்கும் பிரான்ஸின் கலேக்கும் உள்ள இந்த இடைவெளியைக் கடந்த முதலாவது இந்தியரும், ஆசியக்காரருமானவர் இவர்.
★ இந்தியா 1958 அக்டோபர் 1 முதல் தசம முறையை நீட்டளவையிலும், நிறுவை அளவிலும் புகுத்தியது.
★ பிலிப்பைன் நாட்டு 'மக்ஸேஸே' விருதைப் பெற்ற முதலாவது இந்தியர் விநோபா பாவே. 1958 டிசம்பரில் இந்த விருது இவருக்கு அளிக்கப்பட்டது.
★ இங்கிலீஷ் கால்வாயை நீந்திக் கடந்த முதலாவது இந்தியப் பெண்மணி ஆர்த்திஷா. இவர் இதை 1959 செப்டம்பரில் செய்தார்.
★ விளையாட்டு வீரர்களை கௌரவிக்க அர்ஜுனா விருது 1961ல் ஏற்படுத்தப்பட்டது.
★ டாக்டர் ராதாகிருஷ்ணன் இந்தியாவின் இரண்டாவது குடியரசுத்தலைவராக 1962 மே 13ல் பதவி ஏற்றார். அவரது பிறந்த நாள் செப்டம்பர் 5-ஐ 'ஆசிரியர் தின' மாகக் கொண்டாடுவது என்று தீர்மானிக்கப்பட்டது.
★ ஆசியாவில் முதலாவதும், உலகில் இரண்டாவதுமான 'பிர்லா ப்ளானடோரியம்' கல்கத்தாவில் 1962 செப்டம்பர் 29ல் திறக்கப்பட்டது.

# உலகின் மற்ற பகுதிகளில்...

◆ ரஷ்யாவின் லூனா-9 சந்திரனில் 1966 பிப்ரவரி 3ல் பத்திரமாக இறங்கியது. இது மனிதன் சந்திர மண்டலம் போக வழி செய்தது. அது சந்திர மண்டலத்தின் பல பகுதிகளைப் படங்கள் எடுத்து பூமிக்கு அனுப்பியது.

◆ கம்ப்யூட்டரில் 'எலி' (மௌஸ்) எனப்படும் முறையை டக்ளஸ் கில்பர்ட் 1968ல் கண்டுபிடித்தார்.

◆ நோபல் பரிசில் மருத்துவம், இயல்பியல், வேதியியல், இலக்கியம், அமைதி ஆகியவற்றோடு பொருளியலும் சேர்க்கப்பட்டது.

◆ அமெரிக்கா 1973 மே 14ல் விண்வெளிக் கலத்தில் மூன்று விண்வெளி வீரர்களை அனுப்ப அவர்கள் விண்வெளியில் 84 மணி நேரத்தைக் கழித்தனர்.

◆ கிரே-1 எனப்படும் 'சூப்பர் கம்ப்யூட்டரை' 1976ல் செய்மோர் கிரே என்பவர் உருவாக்கினார். அது 2 கோடி 40 லட்ச கணக்குகளை ஒரு விநாடியில் செய்து கொடுக்க வல்லது.

◆ அமெரிக்க விண்வெளிக் கலம் வைக்கிங்-1 செவ்வாய் கிரகத்தில் 1976 ஜூலை 20ல் இறங்கியது. அது பல படங்களை எடுத்து பூமிக்கு அனுப்பியது.

# பாகிஸ்தானுடன் இரண்டாவது போர்

காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு ஜூன் 2ல் கூடி லால் பகதூர் சாஸ்திரியை இந்தியாவின் இரண்டாவது பிரதம மந் திரியாகத் தேர்ந் தெடுத்தது. அவர் ஜூன் 9ல் பதவி ஏற்றார்.


லால் பகதூர் சாஸ்திரி

கம்யூனிஸ்ட் கட்சி 1964 ஏப் ரல் 11ல் இரண் டாகப் பிளவு பட்டது. 1962ல் நடந்த இந்திய-சீனப் போர் காரணமாக ஒரு பிரிவு ரஷ்யாவையும், மற்றது சீனாவையும் ஆதரித்தன. இதனால் நாடாளுமன்றத்தில் கம்யூனிஸ்ட் கட்சி பிரதான எதிர்க்கட்சி அந்தஸ்தை இழந்தது.

ஷேக் அப்துல்லா 1964 ஏப்ரலில் விடுதலை செய்யப்பட்டபின் 'பிளிபிசைட் ஃப்ரண்டை'ப் புதுப்பித்து சுய நிர்ணயம் என்று மக்கள் உரிமையை வலியுறுத்தினார். அவர் 1965 ஏப்ரலில் மெக்கா போய் அங்கு எகிப்தின் தலைவர் நாசரைச் சந்தித்தார். பின்னர் சீனப் பிரதமர் சூ-என்-லாயையும் சந்தித்து சுதந்திரக் கஷ்மீருக்கு அவர்களது ஆதரவைப் பெற்றார். இந்தியா அவரது பாஸ்போர்ட்டை முடக்கியது.

ஏப்ரலில் ஜம்மு-கஷ்மீர் இந்திய அரசியல் நிர்ணயச் சட்டத்தின்கீழ் கொண்டு வரப்பட்டது. சதர்.ஏ. ரியாசத் என்ற பதவி கவர்னர் என்றாகி கஷ்மீர் பிரதம மந்திரி என்பது முதலமைச்சர் என்று ஆக்கப்பட்டது. ஷேக் அப்துல்லா நாடு திரும்பியதும் கைது செய்யப் பட்டார்.

இந்தியாவுடன் பாகிஸ்தான் 1965ல் இரண்டாவது தடவை போர் துவக்கியது. ஏப்ரலில் பாகிஸ்தான் 2000 ச. மைல் இந்தியப் பகுதியை சீனாவுக்குக் கொடுத்தது. பாகிஸ்தான் ராணுவம் குஜராத்தின் கச் பகுதியில் நுழைந்தது. ஜூனில் பாகிஸ்தான் படை இந்தியாவில் 8 மைல் தூரத்திற்கு அத்துமீறி நுழைந்தது.

ஆகஸ்டில் 7000 பாகிஸ்தானி பயங்கரவாதிகள் கஷ்மீர் மக்களோடு கலந்து விட்டது கண்டுபிடிக்கப்பட்டது. பாகிஸ்தான் படை இந்தியாவில் பல இடங்களில் சுட ஆரம்பித்தது.

செப்டம்பர் 1ல் இந்திய விமானப் படை செயல்பட்டு பயங்கரமாகத் தாக்கியது. பஞ்சாபில் செப்டம்பர் 4ல் போர் முனை துவங்கி இந்தியப் படை லாகூரை நோக்கி முன்னேறியது.

செப்டம்பர் 6ல் பாகிஸ்தான் அதிபர் அயூப்கான் இந்தியாவுடன் போர் என அறிவித்தார். இந்திய ராணுவம் பாகிஸ்தானின் 100 பாட்டன் டேங்குகளை அழித்து பெரும் வெற்றி கண்டது. ஐ.நா.வின் பொதுச் செயலாளர் யூ தாண்ட் இப்போரை நிறுத்தும் முயற்சியில் செப்டம்பர் 11ல் இந்தியாவிற்கு வந்தார். இரு நாடுகளும் உடனடிப் போர் நிறுத்தத்தை ஏற்கவில்லை. ஆயினும் ஐ.நா. சபை தொடர்ந்து

சமாதானத்திற்கான வேண்டுகோளை விடுக்கவே செப்டம்பர் 23ல் போர் நிறுத்தப் பட்டது.

பாகிஸ்தான் 710 ச.மைல் பரப்பு நிலத்தை ஒப்படைக்க இந்தியா 210 ச. மைல் நிலத்தை அதற்குக் கொடுத்தது.



★ இந்தியாவின் தேசியப் பறவையாக மயில் 1963 ஜனவரி 31ல் அறிவிக்கப்பட்டது.

★ நாகாலாந்து 1963 டிசம்பர் 1ல் முழு மாநில அந்தஸ்தைப் பெற்றது.



★ முதலாவது கார்ப் பந்தயம் 1964 மார்ச் 22ல் கல்கத்தாவில் நடைபெற்றது. இதில் 50 கார்கள் பங்கேற்றன.

★ முதலாவது நினைவு நாணயங்கள் நேருவின் உருவம் பதிக்கப்பட்டு 1964 டிசம்பரில் வெளியிடப் பட்டன.

## உலகின் மற்ற பகுதிகளில்...

◆ அமெரிக்கா ஒரு மனிதனை 1969 ஜூலை 21ல் சந்திரனில் இறங்க வைத்தது மறக்க முடியாத நிகழ்ச்சி. சந்திரனில் முதலில் அடி எடுத்து வைத்தவர் நீல் ஆம்ஸ்ட்ராங். அவருக்குப் பிறகு 18 நிமிடம் கழித்து எட்வின் ஆல்ட்ரின் அடி எடுத்து வைத்தார். இருவரும் சந்திரனில் அமெரிக்கக் கொடியை நாட்டினார்கள். அவர்கள் இரண்டு மணி நேரம் அங்கிருந்து அதன் கற்களையும், மண்ணையும் எடுத்து வந்ததோடு, அதன் புகைப் படங்களையும் பிடித்து எடுத்து வந்தார்கள். அதுவரை மைக்கேல் காலின்ஸ் என்பவர் ஆரம்ப விண்வெளிக் கலத்தில் காத்துக் கொண்டிருந்தார். மற்ற இரு விண்வெளி வீரர்களும் வந்து அவருடன் சேர, அப்போலோ-11 என்ற அந்த விண்கலம் ஜூலை 24ல் பூமிக்கு வந்தது.

◆ பாகிஸ்தான் 1969 மார்ச் 25ல் இராணுவ ஆட்சியில் வந்தது. ஜெனரல் யாஹியா கான் அதிகாரத்தைக் கைப்பற்ற பாகிஸ்தான் அதிபர் அயூப் கான் பதவி விட்டு விலகினார்.

# இந்தியாவின் பெண் பிரதம மந்திரி

சோவியத் ரஷ்யாவின் தலையீட்டால் இந்தியாவும், பாகிஸ் தானும் போரை நிறுத்தி சமாதான உடன்படிக்கையை ஏற்றன. இந்தியப் பிரதம மந்திரி லால் பகதூர் சாஸ்திரியும், பாகிஸ்தான் அதிபர் அயூப் கானும் தாஷ்கண்டில் கூடி ஏழு நாட்கள் பேசினார்கள்.

1966 ஜனவரி 10ல் இருவரும் நட்புறவுடன் இருப்பதாக ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டார்கள். இரு நாட்டுப் படைகளும் ஆகஸ்ட் 5ல் இருந்த இடங்களில் நிற்கும் என்றும், சிறைப் பிடிக்கப்பட்ட வீரர்கள் பரிவர்த்தனை செய்யப் பட்டு ராஜீய உறவுகள் மீண்டும் தொடரும் என ஒப்புக் கொள்ளப் பட்டது. துரதிர்ஷ்டவசமாய் லால் பகதூர் சாஸ்திரி அங்கு மாரடைப்பால் காலமாகிவிட்டார். குல்ஜாரிலால் நந்தா தற்காலிகப் பிரதம மந்திரியாகப் பதவி ஏற்றார்.

காங்கிரஸ் தலைவர் காமராஜரின் முயற்சியால் இந்திரா காந்தி இந்தியாவின் மூன்றாவது பிரதம மந்திரியாகத் தெரிவு செய்யப்பட்டார். அவர் 1966 ஜனவரி 23ல் பிரதம மந்திரியாகப் பதவி ஏற்றார்.

நவம்பர் 1ல் பஞ்சாப் மாநிலம் பஞ்சாப், ஹரியானா என இரு மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டது. இவற்றின் தலைநகர் சண்டிகர். நான்காவது பொதுத் தேர்தல் 1967 பிப்ரவரியில் நடைபெற்றது. காங்கிரஸ் 283 இடங்களை வென்றது. ஆனால் மாநிலத் தேர்தல்களில் பஞ்சாப், ராஜஸ்தான், பீஹார், ஒரிஸ்ஸா, தமிழ் நாடு, டில்லி ஆகியவற்றில் காங்கிரஸ் தோற்று ஆட்சியை இழந்தது.

மார்ச் 12ல் இந்திரா காந்தி மீண்டும் பிரதம மந்திரியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.


இந்திரா காந்தி

காங்கிரஸிலிருந்து வெளியேறிய சில காங்கிரஸ்காரர்கள் 1967 மே மாதம் 'பாரதீய கிராந்தி தள்' என்னும் அமைப்பை ஏற்படுத்தினர். பி.சி.கோஷ், வீ.கே. கிருஷ்ணமேனன், ஜே.பி. கிருபலானி முதலியோர் இதன் முக்கிய தலைவர்கள். இது காங்கிரஸின் பதவி மோகத்தையும், லஞ்சம், வேண்டியவர்களுக்குச் சலுகை என்பனவற்றையும் ஒழிப்பதாகக் கூறியது.

டாக்டர். ஜாகிர் ஹுசைன் இந்தியாவின் மூன்றாவது குடியரசுத் தலைவராக 1967 மே 13ல் பதவி ஏற்றார். இதே சமயம் மேற்கு வங்காளத்தில் நக்சலைட்கள் தம் இயக்கத்தை வலுப்படுத்தினார்கள்.

டார்ஜிலிங் பகுதியில் நக்சல்பாரியின் அறுபது கிராமங்கள் விவசாயச் சீர்திருத்தம் கோரி ஆயுதங்களைக் கொண்டு தாக்குவதில் முனைந்தனர்.

இது அரசியலாக்கப்பட்டு பல பகுதிகளில் கிராமங்களுக்கும், நகரங்களுக்

கும் கொண்டு செல்லப்பட்டது. ஆந்திரப் பிரதேசம், கேரளா, பீஹார், பஞ்சாப், உத்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களுக்கு இந்த இயக்கம் பரவியது.



டாக்டர். ஜாகிர் ஹுசைன்

★ போப் நான்காவது பால் 1964ல் பம்பாய்க்கு வந்தார். இந்தியாவிற்கு வந்த முதலாவது போப் இவரே.



ஜி. சங்கர குரூப்

★ முதலாவது ஞானபீட விருதை 1965ல் மலையாளக் கவிஞர் ஜி. சங்கர குரூப் பெற்றார்.

★ மிஹிர் சென் ஐந்து ஜலசந்திகளைக் கடந்து சாதனை நிகழ்த்தினார். இவர் பனாமா கால்வாயின் தூரமான 18 மைலை 34 மணி 15 நிமிடங்களில் கடந்தார்.

## உலகின் மற்ற பகுதிகளில்...

◆ பாகிஸ்தானின் யாஹியா கான் பொதுத் தேர்தல்களை நடத்தினார். ஜுல்பிகர் அலி புட்டோவின் பாகிஸ்தான் மக்கள் கட்சி மேற்கு பாகிஸ்தானிலும் முஜிபுர் ரஹ்மானின் அவாமி லீக் கட்சி கிழக்குப் பாகிஸ்தானிலும் வெற்றி பெற்றன. அவாமி லீக் கிழக்குப் பாகிஸ்தானிற்குச் சுதந்திரம் கோரியதால் இரு பகுதிகளிடையே சச்சரவு மூண்டது.

◆ ரஷ்யாவின் விண்வெளிக் கலம் சோயஸில் சென்ற ஒன்பது விண்வெளி வீரர்களும் 1970 ஜுனில், 17 நாட்கள் கழித்தார்கள்.

◆ அமெரிக்கா 1971 நவம்பர் 14ல் விண்வெளியில் அனுப்பிய மேரினர்–9 முதல் தடவையாக செவ்வாய் கிரகத்தைச் சுற்றி வந்தது. அது செவ்வாயைச் சுற்றி வரச் சென்று அங்கு வெடித்துச் சிதறியது. ஆயினும் மார்ஸ்–3 ஏவப்படவே, டிசம்பர் 3ல் அது செவ்வாய் கிரகத்தில் இறங்கி 20 விநாடிகள் சமிக்ஞைகளை அளித்தது.

# பங்களாதேஷிற்கு இந்தியா உதவி

காங்கிரஸ் கட்சியில் கோஷ்டி மோதல் மூண்டு பிளவு ஏற்பட்டது. நிதி அமைச்சர் மொரார்ஜி தேசாயை ராஜி நாமா செய்ய வைத்து, இந்திரா காந்தி தானே அந்த இலாகாவை எடுத்துக் கொண்டு விட்டார்.

ஜாகீர் ஹுசைன் இறந்ததும், துணைத் தலைவர் வி.வி. கிரி 1969 மே 3ல் கடும் போட்டியில் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். துணைத் தலைவராக ஜி.எஸ். பாடக் தேர்ந் தெடுக்கப்பட்டார். குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டி யிட்ட என். சஞ்ஜீவி ரெட்டியும், துணைத் தலைவர் பதவிக்கு நின்ற சிவசண்முகம் பிள்ளையும் தோற்றுப் போயினர். இத் தேர்தலால் காங்கிரஸ் பிளவுபட்டு இந்திரா காந்தி ஆதரவு காங்கிரஸ், காங்கிரஸ் (ஆர்) என்றும், மற்ற பிரிவு காங்கிரஸ் தலைவர் எஸ். நிஜலிங்கப்பா தலைமையில் காங்கிரஸ் (ஓ) என்றும் பெயர் பெற்றன.



வி.வி. கிரி

இந்தியா ஐந்தாவது நாடாளுமன்றத் தேர்தலை 1971 மார்ச்சில் நடத்தியது. காங்கிரஸ் (ஆர்) 518 இடங்களில் 350 ஐக் கைப்பற்றியது. இந்திரா காந்தி மார்ச் 18ல் மீண்டும் பிரதம மந்திரியானார்.

டிசம்பர் 1971ல் பாகிஸ்தானுடன் இந்தியாவின் போர் மீண்டும் மூண்டது. மேற்கு, கிழக்குப் பாகிஸ்தான்களி டையே கருத்து வேறுபாடுகள் அதிகரித் தன. கிழக்கு பாகிஸ்தானில் அடக்கு முறைகள் கடுமையாகின. அங்கிருந்த பெருத்த எண்ணிக்கையில் அகதிகள் இந்தியாவிற்கு வரலானார்கள். இத னால் இந்தியப் பொருளாதாரம் பாதிக் கப்பட்டது. பாகிஸ்தான் விமானங்கள் மேற்கு வங்கத்தில் ஊடுருவின. இந்திய விமானப் படை அவற்றைச் சுட்டு வீழ்த் தியது. நவம்பர் 24ல் இந்தியப் படை கிழக்கு பாகிஸ்தானுக்குள் போய் அங்கு தேசிய உணர்வு கொண்ட முக்திவாகினி என்னும் விடுதலைப் படைக்கு உதவி யது. பாகிஸ்தான் விமானத் தாக்குதலை இந்தியப் பகுதி மீது நடத்தவே இந்தியா பாகிஸ்தானுக்கு எதிராகப் போர் பிரகடனம் செய்தது. இந்திய நாடாளு மன்றம் நெருக்கடி நிலைக்கு ஒப்புதல் அளித்தது.

டிசம்பர் 6ல் இந்தியா பங்களா தேஷை சுதந்திர நாடாக அங்கீகரித்தது. டிசம்பர் 8ல் பாகிஸ்தான் படை சரண டைய உத்திரவிடப்பட்டது. மேற்கு பாகிஸ்தானில் இந்தியப் படை பல வெற்றிகளை அடைந்தது. டிசம்பர் 12ல் பாகிஸ்தான் படைகள் சரணடைய வேண்டுமென மீண்டும் உத்திரவிடப் பட்டது. இரண்டு நாட்களுக்குப் பின் ஜெனரல் நியாஜி போர் நிறுத்தத்தை அறிவித்தார். இந்திய ஜெனரல் ஜே.எஸ்.அரோரா பாகிஸ்தான் படை களின் நிபந்தனையற்ற சரணை ஏற்றார். டிசம்பர் 17ல் இந்தியா போர் நிறுத் தத்தை அறிவிக்க பாகிஸ்தான் அதிபர் அதனை ஏற்றார்.

மேகாலயாவும், அருணாசலப் பிர

தேசமும் மாநில முழு அந்தஸ்து 1972 ஜனவரி 20ல் பெற்றன. மறுநாள் மணிப்பூரும், திரிபுராவும் யூனியன் பிரதேசமான மிஜோராமும் அமைக்கப்பட்டன.

தேர்தல்கள் 16 மாநிலங்களிலும் இரண்டு யூனியன் பகுதிகளிலும் 1972 மார்ச்சில் நடந்தன. காங்கிரஸ் (ஆர்) 14 மாநிலங்களிலும் டில்லி யூனியன் பகுதியிலும் வெற்றி பெற்று ஆட்சி அமைத்தது. கோவாவில் மகாராஷ்டிரவாதி கோமந்தக் தள் ஆட்சிக்கு வந்தது.


புட்டோ

பிரதம மந்திரி இந்திரா காந்தியும், பாகிஸ்தான் பிரதம மந்திரி புட்டோவும் சிம்லா ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டனர். பங்களாதேஷ் விவகாரத்தால் இந்த ஒப்பந்தம் ஏற்பட்டாலும் பேச்சு வார்த்தைகள் கஷ்மீர் பற்றியே அதிகமாக இருந்தன.

சிக்கிம் மன்னர் 1973 ஏப்ரல் 5ல் தன் நாட்டில் சட்டம் ஒழுங்கை நிலைநாட்ட இந்தியாவின் உதவியை நாடினார். அதனால் இந்தியப் படை சிக்கிமிற்குள் சென்றது அங்கு, மன்னரையும் அரசியல் கட்சிகளையும் அந்நாட்டில் ஜனநாயக முறையில் அரசாங்கத்தை அமைக்க இந்தியா ஏற்பாடுகளைச் செய்தது. நாடாளுமன்றம் 1974 செப்டம்பர் 24ல் அரசியல் நிர்ணயச் சட்டத்தின் 35வது திருத்தத்தின் வாயிலாக சிக்கிம் இந்தியாவுடன் சேர்வதை ஏற்றது. இதனால் 1975 ஏப்ரல் 26 முதல் சிக்கிம் இந்தியாவின் 22வது மாநிலமாகியது.

## இந்தியாவின் சில மைல் கற்கள்...

★ மிகவும் வேகமாய்ச் செல்லும் ராஜ்தானி எக்ஸ்பிரஸ் டில்லி ஹௌரா வழியில் 1969 மார்ச் முதல் மணிக்கு 130 கி.மீ. வேகத்தில் ஓடத் தொடங்கியது.

★ இந்தியாவின் நான்காவது ஐந்தாண்டுத் திட்டம் 1969 டிசம்பரில் ஆரம்பிக்கப்பட்டது.

★ திரைப்படத் தயாரிப்பாளர் 'தாதா சாகேப் பால்கே'யின் பிறந்த நாள் விழாவில் அவர் நினைவாக திரை உலகில் நற்பணி ஆற்றியவர்களுக்கு விருது அளிப்பது எனத் தீர்மானிக்கப்பட்டது. முதல் விருதைப் பெற்றவர் பிரபல ஹிந்தி நடிகை தேவிகா ராணி.

★ குஜராத்தின் கிர் வனப் பகுதி ஆசிய சிங்கங்கள் சரணாலயமாக 1969 டிசம்பரில் அறிவிக்கப்பட்டது.

★ குடியரசுத் தலைவர் வி.வி. கிரியின் தேர்தலை எதிர்த்து உச்ச நீதிமன்றத்தில் வழக்கு தொடரப்பட்டது. ஆனால் அது தள்ளுபடியாகிவிட்டது. குடியரசுத் தலைவர் நீதிமன்றத்திற்கு வந்தது இதுவே முதல் தடவை. கிரியே 1970 ஏப்ரல் 20, 21 தேதிகளில் நேரில் ஆஜரானார்.

★ விவேகானந்தா நினைவு மண்டபம் கன்னியாகுமரியில் குடியரசுத் தலைவர் வி.வி. கிரியால் 1970 செப்டம்பர் 20ல் தொடக்கி வைக்கப்பட்டது.

★ உலக நீதிமன்ற நீதிபதி நாகேந்திர சிங் அந்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியாக 1970ல் பதவி பெற்றார்.

# இந்திய அரசியலில் திருப்பங்கள்

இந்தியா அணுசக்தியைப் பயன் படுத்துவது பற்றி தீவிர கவனம் செலுத்தியது. 1974 மே 18ல் அது ராஜஸ்தானில் போக்ரான் அருகே ஓர் அணுசக்திப் பரிசோதனையை பூமிக்குள் நடத்தியது. 107 மீ. ஆழத்தில் காலை 8.15க்குச் சோதனை வெடி வெடிக்கப்பட்டது. இதனால் அணுசக்தி நாடுகள் என ஓரிரு நாடுகளின் ஏகபோக உரிமையை இந்தியா தகர்த்துத் தானும் அணுசக்தி நாடு என அவர்களுக்கு உணர்த்தியது. ஆயினும், இந்த ஆய்வுகள் அழிவுக்காக அல்லாமல் சமாதானத்திற்கே நடத்தப்படுகின்றன என்று இந்தியா அறிவித்தது.

இந்தியாவின் ஐந்தாவது குடியரசுத் தலைவராக பக்ருத்தீன் அலி அகமத் ஆகஸ்ட் 27ல் பதவி ஏற்றார். பி.டி. ஜாட்டி ஆகஸ்ட் 27ல் துணைத் தலைவராகப் பதவி ஏற்றார். ஷேக் அப்துல்லா 1975 பிப்ரவரி 25ல் மீண்டும் கஷ்மீரின் முதலமைச்சரானார். அவர் மத்திய அரசுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தை மாநில சட்டமன்றம் ஏற்றது. அயல் நாட்டு விவகாரங்களைத் தவிர மற்ற விஷயங்களில் சட்ட மன்றம் எந்த முடிவையும் எடுக்கலாம் என்பதே அந்த ஒப்பந்தம். ஜூனில் ஷேக் 'பிளிபிசைட் ஃப்ரண்டை'க் கலைத்து விட்டு தேசிய கான்ஃப்ரன்ஸில் சேர்ந்தார்.


பக்ருதீன்அலி அகமது

நெருக்கடி நிலை 1962–லும், 1965–லும் இந்தியா சீனாவுடனும், பாகிஸ்தானுடனும் போர் புரிந்த போது பிரகடனப் படுத்தப்பட்டது. 1975ல் நெருக்கடி நிலை 1971ல் இந்திரா காந்தி நாடாளுமன்றத் திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது சட்டப் படி செல்லாது என அலகாபாத் உயர்நீதி மன்றம் 1975 ஜூன் 12ல் அளித்த தீர்ப்பின் விளைவு தான். ஜூன் 13ல் எதிர்க்கட்சிகள் இந்திரா காந்தியின் ராஜிநாமாவைக் கோரின. ஜூன் 24ல் இந்திராகாந்தி அலகாபாத் உச்சநீதிமன்றத் தீர்ப்பிற்குத் தடை வாங்கிவிட்டார். கம்யூனிஸ்ட் கட்சியைத் தவிர மற்ற எதிர்க்கட்சிகள் ஜெயப்பிரகாஷ் நாராயண் தலைமையில் இந்திரா காந்தியை எதிர்க்க முடிவு செய்தன. அன்றே குடியரசுத் தலைவர் பக்ருதீன் அலி அகமத் நெருக்கடி நிலைப் பிரகடனம் செய்தார்.

ஜெயப்பிரகாஷ் நாராயண், மொரார்ஜி தேசாய், ஏ.பி. வாஜ்பாய், எல்.கே. அத்வானி, சரண்சிங், அசோக் மேஹ்தா மற்றும் பல தலைவர்கள் சிறைப்படுத்தப்பட்டனர். ஆர்.எஸ். எஸ்., ஆனந்த மார்க் மற்றும் பல அமைப்புகள் மீது தடை விதிக்கப் பட்டது. பத்திரிகைகள் மீது கட்டுப்பாடு விதிக்கப்பட்டது. நவம்பர் 7ல் இந்திரா காந்தியின் தேர்தல் செல்லும் என்று உச்ச நீதிமன்றம் தீர்ப்பளித்தது. அடுத்த பொதுத் தேர்தலுக்குச் சற்றுமுன் 1977ல் நெருக்கடி நிலை ரத்து செய்யப்பட்டது.

நாடாளுமன்றத்தில் 1976ல் ஒரு புதிய அரசியல் கட்சியான ஜனதா கட்சியை நான்கு கட்சிகள் சேர்ந்து உருவாக்கின. ஜனசங்கம், காங்கிரஸ்(ஓ), பாரதீய லோக் தள், சோஷலிஸ்ட் கட்சி ஆகியவை. அவை 1977ல் ஜனதா கட்சி காங்கிரஸிடமிருந்து ஆட்சியைக் கைப் பற்றியது.

*(அடுத்த இதழில் : இந்தியக் குடியரசு பற்றி)*



# கவி சொல் வலிமை

கங்காபுர மன்னன் கஜேந்திர சிம்மன் தன் நாட்டை நன்கு ஆண்டு மக்களின் நன்மதிப்பைப் பெற்றான். ஒரு நாள் அவன் தர்பாரில் இருந்த போது, சந்தனகுப்தன் என்ற வாசனை திரவிய வியாபாரி வந்து அவனை வணங்கி, ''அரசே...! தங்களது நல்லாட்சியில் இருக்கும் எனக்கு, என் வியாபாரம் நன்கு நடைபெற்று வருகிறது. இன்று ஜாவாத் தீவில் இருந்து சிறப்பான வாசனை மிகுந்த அத்தர் கொண்டு வந்துள்ளேன். அதை நம் நாட்டில் முதலில் உங்களுக்குச் சமர்ப்பிக்க வேண்டியது என் கடமை. எனவே இதனை ஏற்றுக் கொள்ளுங்கள்'', எனக்கூறி ஒரு சிறு சிமிழ் அத்தரை மன்னனிடம் கொடுத்தான்.

மன்னன் அந்த அத்தரைத் தன் கையில் தடவி வாசனை பார்த்தான். நல்ல வாசனை இருக்கவே, அந்த அத்தரை தர்பாரிலுள்ள எல்லோர் சட்டைகளிலும் தடவும்படித் தன் பணியாட்களுக்குக் கட்டளை இட்டான். அவர்களும் அதைச் செய்து முடிக்கவே, தர்பார் மண்டபம் முழுவதிலும் நல்ல வாசனை பரவியது.

அப்போது ஆஸ்தான கவிஞர் அனந்தபாரதி எழுந்து, ''சந்தனகுப்தன் ஜாவாவிலிருந்து கொண்டு வந்தது அத்தர் வாசனை மட்டுமல்ல, ஜாவா வில் பரவியுள்ள நம் மன்னரின் புகழின் நறுமணம்'', என்றார். அதைக் கேட்டு தர்பாரில் இருந்த யாவரும் கவிஞரைப் பாராட்டினார்கள். சந்தனகுப்தனும், ''அரசே...! கவிஞர் கூறியது முற்றிலும் உண்மையே! இனி நான் விற்கப் போகும் இந்த ரக அத்தருக்கு 'கஜராஜ அத்தர்' என்று பெயர் சூட்டுகிறேன். இதற்கு அனுமதி அளியுங்கள்'', என வேண்டவே,

மன்னனும் புன்னகை புரிந்து அனுமதியும் அளித்தான்.

சந்தனகுப்தன் விற்ற கஜராஜ அத்தரை எல்லோரும் விரும்பி வாங்கினார்கள். மன்னரின் அந்தப்புரத்திலும் அதற்கு நல்ல ஆதரவு கிடைத்தது. சந்தனகுப்தனுக்கு இதனால் நல்ல லாபம் கிடைத்தது. கவிஞர் அனந்த பாரதி கூறியதைக் கேட்டே தான் அத்தருக்கு அந்தப் பெயர் வைத்ததால், தன் வியாபாரம் நன்கு நடந்து வருவதற்கு அவர்தான் காரணம் என்று சந்தனகுப்தன் எண்ணினான்.

இக்காரணத்தால், அவன் கவிஞர் அனந்தபாரதியைத் தன் வீட்டிற்கு அழைத்து, ''மகாகவியே...! என் அத்தர் வியாபாரம் தங்களால் தான் நன்கு நடைபெற்று வருகிறது. அதற்கு தங்களது சொல் வலிமையால் மன்னரின் பெயர் சூட்டினேன். அது போலத் தாங்கள் என்னைப் புகழ்ந்து, ஏதாவது எழுதினால் மற்ற பொருள்களிலும் என் வியாபாரம் நடக்கும்'', எனக் கூறி ஒரு தட்டில் பட்டு வேட்டியையும், பணப்பையையும் வைத்து அவரிடம் நீட்டினான்.

கவிஞரோ அதை ஏற்க மறுத்து, ''கவிஞனை யாரும் இதைப் பாடு என்று கூறி விலை கொடுத்து வாங்கி விட முடியாது. கவிஞனுக்கு நல்லது என்று எது தோன்றுகிறதோ, அதைத் தான் எழுதுவான். தவறு என்றால் அதைச் செய்தவன் மன்னனாக இருந்தாலும் அவனை நாற்சந்தியில் நிறுத்தி, யாவரும் இகழும்படிச் செய்வான். இது தான் என் போன்ற கவிஞர்களின் சக்தி. எனவே, நீ சுயநலம் கருதி என்னை ஏதாவது எழுதிக் கொடுக்கும் படிக் கேட்பதால் நான் எழுத மாட்டேன்'', என 'வெடுக்'கெனக் கூறிவிட்டுப் போய் விட்டார். சந்தனகுப்தனால் எதுவும்



பேச முடியவில்லை.

கவிஞர் இவ்வாறு சந்தன குப்தனிடம் கூறியது, ஊர் முழுவதும் பரவியது. இதற்குப் பின் நான்கைந்து ஆண்டுகளில் கடும் வறட்சி ஏற்பட்டு நாட்டில் உணவுப் பஞ்சம் தலை விரித்து ஆடியது. இதனால் பலர் வேறு நாடுகளுக்குப் போய்விடத் தீர் மானித்தார்கள். அவர்களில் சந்தன குப்தனும் ஒருவன். இதுதான் தனக்குக் கிடைக்கும் நல்ல வாய்ப்பு என்று எண்ணி அண்டை நாட்டு மன்னன் அஜெயசேனன் கங்காபுரத்தின் மீது படை எடுப்பதற்கான முயற்சியில் இறங்கினான். இதனால் அவனுடன் சமாதானம் பேசி, போரில்லாமல் செய்து விடலாமென கஜேந்திர சிம்மன் எண்ணினான். அமைச்சரிடம் அவன் தான் நினைத்ததைக் கூறவே, அவரும் கவிஞர் அனந்தபாரதியை அஜெயசேனனிடம் தூதுவராக அனுப்பி, பேசிவரச் செய்யலாம் என்று யோசனை கூறினார்.

கஜேந்திரசிம்மனும் கவிஞர் அனந்தபாரதியைத் தூதுவராக அஜெயசேனனிடம் அனுப்பினான். அவனும் கவிஞரை வரவேற்று, ''தூதுவராக வந்தவருக்கு எவ்விதக் கெடுதலும் செய்யக் கூடாது என்பது உலக வழக்கு. நான் உங்கள் நாட்டின் மீது படை எடுத்து வென்று, என் நாட்டுடன் சேர்த்துக் கொள்ளப் போகிறேன். இது பற்றி, உங்கள் கருத்தை தாராளமாகக் கூறலாம்'', என்றான்.

கவிஞரும், ''அரசே...! நான் இன்னமும் எம் மன்னரின் செய்தியைத்



தங்களிடம் கூறவில்லை. அதற்குள் நீங்கள் முடிவு செய்துள்ளதைக் கூறி விட்டீர்கள். இப்போது எம் நாடு சற்று பலம் குறைந்துதான் உள்ளது. நாங்கள் வீணாக ரத்தம் சிந்தவும் விரும்ப வில்லை. ஒரு வீட்டின் வாசல் கதவு திறந்திருந்தால், நாய் உள்ளே வந்து விடும். அவ்வீட்டுக்காரன் தக்க சமயம் பார்த்து தடியால் அடித்து விரட்டு வான். அது போலத்தான், நீங்கள் இப்போது எம் நாட்டிற்குள் நுழைந் தால், தக்க சமயம் பார்த்து நாயை அடித்து விரட்டுவது போல விரட்டி விடுவோம். இப்படிச் செய்யத்தான் எம் மன்னர் எங்களைப் பழக்கி இருக்கிறார்'', என்று கூறினார்.

கவிஞர் கூறியது, அஜெயசேனனுக்கு கோபத்தை மூட்டினாலும் 'தூதுவர்' என்ற காரணத்தால், அவரை அவரது நாட்டிற்குப் போக விட்டான்.

கவிஞரும் தம் நாட்டிற்கு வந்து, கஜேந்திரசிம்மனிடம் அஜெய சேனன் கூறியதையும், அதுகேட்டு தான் பதிலாகக் கூறியதையும் விவர மாகக் கூறினார். அஜெயசேனன் படை எடுத்து வந்தால், கடுமையாக எதிர்ப்பது என்று கஜேந்திரசிம்மன் ஆவேசத்துடன் கூறினான்.

கவிஞர் அனந்தபாரதி அஜெய சேனனிடம் கூறிய வீராவேசச் சொற் கள், கங்காபுரத்து மக்களின் நாட்டுப் பற்றைத் தட்டி எழுப்பியது. உயிர் போகும் வரை எதிரியை எதிர்த்துப் போராடுவது என்று அவர்கள் கங் கணம் கட்டிக் கொண்டார்கள். சந்தன குப்தன் போன்றவர்கள் பல நாடுகளி லிருந்து, உணவு தானியங்களை வர வழைத்து, மக்களுக்கு விநியோகம் செய்தார்கள். கங்காபுரத்து மக்கள் போர் புரியத் தயாராகிறார்கள் என்பதைக் கேட்டு, அஜெயசேன னின் நாட்டு மக்கள், ''நம் மன்னன் இப்போது கங்கா புரத்தின் மீது படை எடுத்துச் சென்றால் கவிஞர் அனந்த பாரதி கூறியது போல, திறந்த வீட்டில் நாய் நுழைந்தது போலாகி விடும். இப்போதுள்ள நிலையில் நம் மன்னர் படை எடுத்துத் தோற்று வந்தால், அடிபட்ட நாய் போலாகி விடும். இப்படி நம் அரசர் ஓர் அறிவற்ற செயலைச் செய்யவா வேண்டும்?'', என்று கூறலானார்கள்.

அஜெயசேனனுக்குத் தன் நாட்டு மக்கள் எண்ணுவது தெரிந்தது. அத னால் அவன் வெட்கப்பட்டான். அவன் கஜேந்திரசிம்மனிடம் தன் தூதனை அனுப்பி, ''எனக்கு உங்கள் நாட்டின் மீது படை எடுக்கும் எண் ணமே இல்லை. உங்கள் நாட்டில் உணவுப் பஞ்சம் எனக் கேள்விப்பட் டேன். எனவே, உங்கள் நாட்டிற்கு உணவு தானியங்களை அனுப்பி வைக் கிறேன்'', என்ற செய்தியை அனுப்பி னான். இதன் பிறகு இரு நாடுகளும் நட்புறவுடன் இருந்தன. அஜெய சேனன் வாக்களித்தபடி, உணவு தானியங்களை கங்காபுரத்திற்கு அனுப்பி, உதவினான். கவிஞர் அனந்த பாரதியின் சொல்வலிமை நாட்டைக் காப்பாற்றியது.



## 61. பீஷ்மர் மரணம்

# மகாபாரதம்

தனக்கு நாடு மீண்டும் கிடைக்கச் செய்த கிருஷ்ணருக்கு, தருமர் தன் நன்றியைத் தெரிவித்துத் தலைவணங்கினார். பின்னர் தன் தம்பிகளைப் பார்த்து, ''நீங்கள் காட்டில் பனிரெண்டு வருடங்களும், ஒரு வருட அஞ்ஞாத வாசமும் புரிந்து மிகுந்த பொறுமையைக் காட்டியிருக்கிறீர்கள். அதில் தான் எவ்வளவு சிரமப் பட்டீர்கள்! இனி உங்களுக்கு ஓய்வு தேவை'', என்றார்.

திருதராஷ்டிரன் அனுமதி பெற்று, துரியோதனனின் மாளிகையை அர்ஜுனனுக்கும், துர்மர்ஷனின் மாளிகையை நகுலனுக்கும், துன்முகனின் மாளிகையை சகாதேவனுக்கும் தருமர் அளித்தார். அவர்கள் தம் மாளிகைகளுக்குச் சென்று வசித்தனர். கிருஷ்ணரும், சாத்தியகியும் அர்ஜுனனின் மாளிகையில் தங்கி இருந்தனர்.

ஒரு நாள் தருமர் கிருஷ்ணரிடம், ''போரில் நாங்கள் வெற்றி பெற்ற போதிலும், நாங்கள் செய்தது பாவச் செயலோ என்று, என் மனதை இன்னமும் உறுத்திக் கொண்டே இருக்கிறது. இந்த சந்தேகத்தைப் போக்க தாங்கள் ஏதாவது வழி செய்வீர்களா?'', என்று கேட்டார். கிருஷ்ணரும், ''தருமா...! எனக்கு இப்போது பீஷ்மரின் நினைவு தான் வருகிறது. அவர் அறியாத தர்ம சாஸ்





திரம் இல்லை. அம்புப் படுக்கையில் படுத்துள்ள அவர் இறந்து போனால், அவர் அடைந்துள்ள ஞானம் அவ ரோடு மறைந்து போய் விடும். எனவே, நீ இப்போதே அவரிடம் சென்று உன் சந்தேகங்களைக் கூறி அவரிடமிருந்து பல அரிய விஷயங் களைத் தெரிந்து கொள்!'' என்றார்.

தருமரும், ''நீங்கள் கூறுவது போல அவர் எல்லா சாஸ்திரங்களை யும் நன்கு கற்றவர். எனவே, நீங்களும் எங்களுடன் அவரைக் காண வாருங் கள். அவருக்குக் கூட உங்களைக் கடைசி தடவையாகப் பார்க்க வேண் டும் என்ற விருப்பம் இருக்கும்'', என்றார். கிருஷ்ணரும் சாத்தியகி யிடம், ''நாம் பாண்டவர்களுடன் சேர்ந்து பீஷ்மரைக் காணச் செல் கிறோம். எனவே, ரதத்தைத் தயார் செய்!'', என்றார்.

சாத்தியகி கொண்டு வந்த ரதத்தில் கிருஷ்ணர் ஏறிக் கொண்டார். தரு மரும், அர்ஜுனனும் ஒரு ரதத்தில் அமர, பீமனும், நகுலனும், சகா தேவனும் இன்னொரு ரதத்தில் ஏறிக் கொண்டார்கள். கிருபர், யுயுத்சு, சஞ் சயன் ஆகியோர் தம் ரதங்களில் அமர்ந்து கொள்ள, எல்லோரும் பீஷ் மர் சயனித்திருக்கும் இடத்திற்குச் சென்றார்கள். வழியில் அவர்கள் ஐந்து மடுக்களைக் கண்டார்கள். அவை பரசுராமரால் உண்டாக்கப் பட்டவை என்று கிருஷ்ணர் பாண் டவர்களிடம் கூறினார். பரசுராமர் இருபத்தோரு முறை பூவுலகைச் சுற்றி வந்து, க்ஷத்திரியர்களைத் தேடிக் கண்டுபிடித்து, அவர்களைக் கொன்று, அவர்களது ரத்ததால் அந்த மடுக்களை நிரப்பினாராம். அந்த ரத்தத்தைக் கொண்டு, அவர் பித்ரு தர்ப்பணங்களைச் செய்தாராம்.

அதைக் கேட்ட தருமர், ''பரசு ராமர் க்ஷத்திரியர்கள் மீது ஏன் கோபம் கொண்டார்?'' என்று கேட்டார். கிருஷ்ணரும் பரசுராமரைப் பற்றி அவர்களுக்குக் கூறலானார்.

ஜஹ்னு என்ற ராஜரிஷியின் வம் சத்தில் பிறந்தவர் காதி. அவருடைய மகள் சத்தியவதி. ஆனால், அவருக்கு ஆண் சந்ததியே இருக்கவில்லை. சத்தியவதியின் திருமணம் பிருகுவின் மகனான ரிசிகருடன் நடந்தது. ரிசிகர் தனக்கும், தன் மாமனாருக்கும் ஆண் சந்ததிகள் பிறக்க வேண்டுமென எண்ணி ஹவிசைத் தயார் செய்தார்.

அதனை இரு பாகங்களாக்கித் தன் மனைவியிடம் கொடுத்து, ''இதில் இந்த பாகத்தை உன் தாயாரிடம் கொடுத்துச்சாப்பிடச்சொல்! மற்றதை நீ சாப்பிடு ! இதை மாற்றி விடாதே! இப்படிச் செய்தால் உன் தாய்க்கு பராக்கிரமசாலியான மகன் பிறப்பான். அவன் க்ஷத்திரியர்களை எல்லாம் முறியடித்து மன்னனாவான். உனக்கு பரமசாதுவான பிராம்மணன் மகனாகப் பிறப்பான்'', என்று கூறினார்.



இதற்கு இரண்டு நாட்களுக்குப் பிறகு சத்தியவதியின் தாய், தந்தையர் அவளது இல்லத்திற்கு வந்தார்கள். அப்போது சத்தியவதி, தன் கணவர் கொடுத்த ஹவிசு பாகங்கள் இரண்டையும், தன் தாயிடம் கொடுத்து, அவை பற்றிய விவரங்களையும் கூறினாள். அவளது தாய் தவறுதலாகத் தான் சாப்பிட வேண்டியதைத் தன் மகளுக்குக் கொடுத்து விட்டு, அவள் சாப்பிட வேண்டியதைத் தான் உட்கொண்டு விட்டாள். இதை அறிந்த ரிசிகர் ''உன் தாய் செய்த தவறால் உனக்கு மிக்க கொடூரமான க்ஷத்திரியன் பிறப்பான். உன் தாய்க்கு பிரம்மணோத்தமன் பிறப்பான்'', என்று கூறினார்.

இதைக் கேட்ட சத்தியவதி கண்ணீர் உகுத்தவாறே, ''எனக்குக் கொடூரமான மகன் பிறப்பதை சகித்துக் கொள்ள முடியாது. அதனால் உங்கள் தவ வலிமையால் எனக்குக் கொடூரமான மகன் பிறக்காமல் நல்லவனாகப் பிறக்கச் செய்யுங்கள். வேண்டுமானால், என் மகனுக்குக் கொடூரமான மகன் பிறக்கட்டும்'' என்று கூறினாள். ரிசிகரும் அவ்வாறே செய்து விடுவதாகக் கூறினார்.

சத்தியவதிக்கு சாந்த குணமுடைய ஜமதக்னியும், அவளது தாய்க்கு விசுவாமித்திரரும் பிறந்தனர். ஜமதக்னிக்குப் பரசுராமர் பிறந்தார். பரசுராமர் வளர்ந்து பெரியவரானதும், கந்தமாதனப் பர்வதத்திற்குச் சென்று சிவபெருமானைக் குறித்து கடுந்தவம் புரிந்தார். சிவபிரானும் அவர் முன் தோன்றி, அவர்களுக்கு பல அஸ்திரங்களையும், சக்தி வாய்ந்த கோடாலி ஒன்றையும் கொடுத்து விட்டு மறைந்தார். இச்சமயம் ஹைஹய வம்சத்தைச் சேர்ந்த கிருதவீரனின் மகனான கார்த்தவீர்யார்ஜுனன் என்பவன் தத்தாத்திரேயரின் அருளைப் பெற்று,

ஆயிரம் கைகளுடையவனாக ஆனான். அவன் மன்னர்களை எல்லாம் வென்று அசுவமேத யாகம் செய்தான். அப்போது பிராம்மணர்களுக்கு ஏராளமான தானங்களைச் செய்தான். அக்னி தேவனுக்கு பர்வ தாரணியப் பகுதிகளை தானமாக அளித்தான். அப்பகுதியை அக்கினி தேவன் எரித்தபோது, அங்கிருந்த வசிஷ்டரின் ஆசிரமமும் எரிந்து சாம்பலாகி விட்டது.

அதனால் வசிஷ்டர் வேதனைப் பட்டு உணர்ச்சிவசத்தால், ''என் ஆசிரமத்தை எப்படி அக்னிதேவன் நாசப்படுத்தினானோ இதற்குக் காரணமான கார்த்தவீரியார்ஜுனனின் கைகளை பரசுராமன் வெட்டித் தள்ளுவான்'', என்று சபித்தார். அதனை கார்த்தவீரியார்ஜுனன் சற்றும் பொருட்படுத்தவில்லை.

கார்த்தவீரியார்ஜுனனுக்கும், பரசுராமருக்கும் பகைமை ஏற்படக் காரணமாக இருந்தவர்கள் அவனது புதல்வர்களே. கர்வத்தால் தலைகால் தெரியாமல் துள்ளிய அவர்கள், பரசுராமரின் ஆசிரமத்திற்கு அவர் அங்கு இல்லாத நேரத்தில் போய், அவரது யாகப் பசுவையும், கன்றையும் ஓட்டிக்கொண்டு போய் விட்டார்கள். அதனால் பரசுராமர் கோபம் கொண்டு, கார்த்தவீரியார்ஜுனனைப் பிடித்து, அவனது ஆயிரம் கைகளை வெட்டித் தள்ளினார்.

இதனால் ஹைஹயர்கள் ஆத்திரமடைந்து, பரசுராமர் ஆசிரமத்தில் இல்லாத போது அங்கு சென்று,



ஜமதக்னியின் தலையை வெட்டி எறிந்தார்கள். இதனால் கடுங்கோபம் கொண்டு பரசுராமர் உலகில் க்ஷத்திரியர்களே இல்லாதபடி செய்து விடுவதாக சபதம் செய்தார். முதலில் கார்த்தவீரியார்ஜுனனின் மகன்களைக் கொன்று விட்டு, அவர் க்ஷத்திரியர்களைத் தேடிக் கொன்று கொண்டே வந்தார். க்ஷத்திரியர்கள் இனி யாருமே இல்லையெனக் கண்டு, மனச் சாந்தி பெற அவர் காட்டிற்குச் சென்று தவம் புரியலானார்.

சிறிது காலத்திற்குப் பின், விசுவாமித்திரரின் மகனான பராவசு என்பவன் பரசுராமரிடம் வந்து, ''க்ஷத்திரியர்கள் எல்லோரையும் கொன்று விடுவதாகச் சபதம் செய்தீர்களே...! ஆனால் சபதப்படி அதை முழுவதுமாகச் செய்து முடிக்க



பரசுராமரும் அதற்கு இணங்கினார்.

கசியபர் தான் அடைந்த பூமிக்கு அந்தணர்களை மன்னர்களாக்கினார். அதன் பின் அவர் தவம் புரியச் சென்று விட்டார். பிராம்மணர்களின் ஆட்சியில் கலகங்கள் மூண்டன. வலியவர்கள் எளியவர்களைத் தாக்கித் துன்புறுத்தினார்கள். இதை அறிந்த கசியபர் பூமியை ஆள க்ஷத்திரியர்களைத் தேடிப் பார்க்கவே, அவருக்கு ஒரு சிலர் கிடைத்தார்கள்.

கசியபர் இந்த க்ஷத்திரியர்களை எல்லாம் கூப்பிட்டு, அவர்களுக்கு நாடுகளைக் கொடுத்து, முறையாக ஆண்டு வரும்படி அறிவுரை கூறினார். இதன் பின், பூவுலகில் புதிய அரச வம்சங்கள் தோன்றின.

வில்லையே? பிரதர்த்தனும், அவனைச் சேர்ந்த க்ஷத்திரியர்களும் இன்னமும் உயிருடன் தானே இருக்கிறார்கள்!'' என்றான். பரசுராமர் மீண்டும் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு கிளம்பினார். தயை, தாட்சணியம் காட்டாமல், கிழவர்கள், குழந்தைகள், கர்ப்பத்தில் உள்ள சிசுக்கள் என்று எல்லா க்ஷத்திரியர்களையும் பூண்டோடு அழித்தார். இவ்வாறு இருபத்தோரு முறை பூவுலகில் சுற்றி க்ஷத்திரியர்களே எங்கும் இல்லாமல் செய்த பின், அவர் அசுவமேத யாகம் செய்து பூவுலகம் முழுவதையும் கசியபருக்குத் தானம் செய்தார்.

கசியபர் அதனை தானமாகப் பெற்ற பின், ''பரசுராமா...! நீ உட்கார மட்டும் அளவுள்ள நிலத்தை உனக்குக் கொடுக்கிறேன். அதில் அமர்ந்து நீ தவம் செய்து கொண்டிரு'' என்றார்.

கிருஷ்ணர் கூறிய பரசுராமரின் வரலாற்றைக் கேட்டுக் கொண்டே, தருமர் பீஷ்மரைக் காணச் சென்றார். பீஷ்மர் உத்தராயன புண்ணிய காலத்தை எதிர்நோக்கித் தம் உயிரை விடத் தயாராகிக் கொண்டிருந்தார். அதற்கு இன்னமும் ஐம்பத்தாறு நாட்களே இருந்தன. முதலில் தருமர் தான் போர் புரிந்த எதிரிகளைக் கொன்றது பெரும் பாவம் தானே என்ற தன் சந்தேகத்தை கேட்டார். பீஷ்மரும், ''இல்லை. நீ க்ஷத்திரியன். போர் புரிந்தால் எதிரிகளைக் கொல்ல வேண்டியது ஒரு க்ஷத்திரியனின் கடமை. அதனால் பாவம் வராது. நீ உன் கடமையைத் தான் செய்தாய்'' என்றார். அதன் பின் அவர் உயிருடன் இருந்த வரையில், தருமருக்கு சாஸ்திரங்கள் பற்றிக் கூறி அறிவுரை

களையும் சொன்னார்.

உத்தராயண புண்ணிய காலம் பிறந்ததுமே, பீஷ்மரின் உடலிலிருந்து அவரது உயிர் பிரிந்தது. அப்போது, அவரது உடலில் குத்தி இருந்த அம்பு கள் தாமாகவே உதிர்ந்து போயின. அவரது பூத உடல் சந்தனக் கட்டை களைக் கொண்டு எரிக்கப்பட்டது. பாண்டவர்கள் திருதராஷ்டிரன், கிருஷ்ணர் ஆகியோர் ஈமச் சடங்கு களில் கலந்து கொண்டனர். முறைப் படி எல்லாம் செய்யப்பட்டது.

வியாசர் தருமரிடம் அசுவமேத யாகம் செய்யும்படிக் கூறினார். தருமரோ, ''மகாத்மா...! அசுவமேத யாகம் செய்வதென்றால் நிறைய தான, தர்மங்கள் செய்ய வேண்டும். அதற்கு நிறையப் பணம் இருக்க வேண்டும். அரசாங்கப் பொக்கிஷத் திலும் பணம் இல்லை. போரினால் மனமுடைந்து போயிருக்கும் மக்க ளிடமிருந்தும் வரியாகப் பணம் பெற முடியாது. நான் என்ன செய்ய முடியும்?'' என்றார்.

வியாசரும், ''கவலைப்படாதே! நீ நிறையப் பணம் பெறக்கூடிய வழி யைச் சொல்கிறேன். முன்பு மருத் என்ற மகாராஜா யாகங்கள் செய்ய எண்ணி, பிரகஸ்பதி முன் நின்று அந்த யாகங்களை நடத்தித் தர வேண்டு மென்று வேண்டினான். இதற்காக யாகங்களுக்கும், தான, தர்மங்களுக் கும் தங்கப் பாத்திரங்களாகவே செய்து தயாராக வைத்துக் கொண்டான். யாகங்களுக்குப் பல மன்னர்களை இமயமலையின் வட பகுதிக்கு அழைத்து, அங்கு யாகங்களைச் செய்ய ஏற்பாடுகளைச் செய்தான்.

ஆனால், இந்திரனோ மருத்திற்கு பிரகஸ்பதி உதவக்கூடாது என்று தடை செய்தான். அதனால், மருத் பிரகஸ்பதியின் தம்பி சம்வர்த்தன னைக் கொண்டு யாகங்களைச் செய்து, தான, தர்மங்களைச் செய் தான். அப்படிச் செய்தது போக, அங்கு ஏராளமான தங்கப் பாத்திரங்களும், தங்க நாணயங்களும் மிகுந்து கிடக் கின்றன. நீ அவற்றை எடுத்து வந்து யாகத்தைச் செய்.''

இவ்வாறு வியாசர் தருமரிடம் யாகம் செய்வதற்கு வேண்டிய பணம் திரட்டும் வழியைக் கூறினார்.



# நம் இந்தியா

## வினாக்கள்

நம் பத்திரிகை ரிஷி முனிவர்கள், சாது, சன்னியாசிகள் ஆகியோர் பற்றி அவ்வப்போது விவரங்களை அளித்து வருகிறது. அவற்றைப் படித்த நீங்கள் அவற்றை நினைவில் வைத்திருக்கிறீர்களா எனக் காணவே இவ்வினாக்கள் கேட்கப்படுகின்றன.

1. ஓர் அரசகுமாரி அரண்மனை சுகபோகங்களை உதறித் தள்ளிவிட்டு பகவான் கிருஷ்ணனின் பக்தையாகி விட்டாள். அவள் யார்?
2. மற்றொரு பக்தர் எப்போதும் பகவான் கிருஷ்ணரையே புகழ்ந்து பாடியவர். அவர் பார்வையற்றவர். அவர் யார்?
3. வங்காளத்தில் பக்தி மார்க்கத்தைப் பரப்பிய மகான் யார்?
4. ஆதிசங்கரர் ஐந்து மடங்களை வெவ்வேறு இடங்களில் அமைத்தார். அந்த இடங்கள் யாவை?
5. ஒரு தமிழ் பெண் கவிஞர் முருகக் கடவுளின் பரமபக்தை. அவர் யார்?
6. ஒரு மாபெரும் முஸ்லிம் சாது எல்லா மதங்களையும் சமமாகக் கருதியவர். அவர் யார்?
7. ஹிந்துக்களும், முஸ்லிம்களும் ஒரு மாபெரும் சாதுவை பக்தி சிரத்தையுடன் வழிபட்டனர். அவர் யார்?
8. ஸ்ரீபெரும்புதூர் அண்மையில் சில ஆண்டுகளுக்கு முன் பிரதமராக இருந்த ராஜீவ் காந்தியைப் பலி கொண்ட இடம் என்பது யாவரும் அறிந்ததே. இதே ஊர் ஒரு புகழ் பெற்ற மதாச்சாரியார் பிறந்த இடம். அந்த மதாச்சாரியார் யார்?

–(விடைகள் அடுத்த மாதம்)

### பிப்ரவரி மாத வினாக்களின் விடைகள்

1. டில்லியில் நான்கு ஆண்டுகள் ஆட்சி புரிந்த சுல்தானா ரஜியா.
2. அன்னை தெரஸா.
3. பிரதமர் இந்திரா காந்தி.
4. சுகாதார அமைச்சராக இருந்த ராஜ்குமாரி அமிருத் கௌர்.
5. கேப்டன் லக்ஷ்மி.
6. டாக்டர். அன்னி பெசன்ட்.
7. நர்கிஸ் தத்.
8. எம்.எஸ். சுப்புலக்ஷ்மி.
9. அருந்ததி ராய். அவரது நாவல் 'தி காட் ஆஃப் ஸ்மால் திங்ஸ்'.
10. ஆஷா பூர்ண தேவி. அவரது வங்காள நாவல் 'பிரதம் ப்ரதி ஸ்ருதி'க்காக.
11. அமிர்தா ஷேர்கில்.
12. லதா மங்கேஷ்கர் – மிக நிறையத் திரைப்படப் பாடல்களைப் பாடியதற்காக.

இது அம்புலிமாமாவின் அன்பளிப்பு

# வீரதீர பராக்கிரமன்

ஓவியம் : பாணி

சந்திர வம்ச மகேந்திரனின் நீண்டகால ஆட்சியில் நாட்டு மக்கள் சுகவாழ்வு வாழ்ந்தனர். நாட்டின் சேனாதிபதி மன்னனின் மைத்துனன் நரேந்திரதேவன் திறமையற்றவன். மன்னனுக்கு குழந்தையே பிறக்காததால், நரேந்திரனின் மகன் ரவீந்திரதேவனே வருங்கால மன்னன் என்று யாவரும் கருதினார்கள். முதலமைச்சரின் திடீர் மரணம் மகேந்திரனுக்கு அதிர்ச்சியை அளித்தது. அவன் குருகுலத்தில் கல்வி பயின்று கொண்டிருந்த முதலமைச்சரின் மகன் ஆதித்தனை வரவழைத்துத் தன் அந்தரங்க ஆலோசகனாக நியமித்தான்.
















அன்றிரவு காட்டின் வழியே ஒரு பல்லக்கு வந்தது. அதன் முன்னும் பின்னும் வீரர்கள் நடந்து சென்று கொண்டு இருந்தார்கள்.


உயர்ந்த மலை உச்சி மீதிருந்து ஒருவன் அக்கூட்டத்தைப் பார்த்தான்.


திடீரென்று...


அடுத்த வினாடி கொள்ளைக்காரர்கள் பல்லக்கைச் சூழ்ந்து கொண்டார்கள். பல்லக்குத் தூக்கிகள் அதைக் கீழே இறக்க, அதை அவர்கள் தாங்கினார்கள்.


உள்ளே இருப்பவர்கள் வெளியே வாருங்கள்.
நகைகளை எல்லாம் கழட்டுங்கள்.
தப்பி ஓடுகிறான். பிடியுங்கள்!


பெண்கள் எல்லாம் எப்படி மாயமானார்கள்?
எல்லோரும் ஓடிப் போனார்களா?
ஒருவன்கூட என் கண்ணில் படவில்லையே...!
குதிரைமீது யாரோ வருகிறான்.
கொள்ளைக் கூட்டம் ஆச்சரியமும், பயமும் அடைந்தது.
நாம் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.
நாம் வலையில் சிக்கி விட்டோமா?
மரத்தின் மேல் ஒளிந்து கொள்வோம்.


சில வீரர்கள் ஒடிந்த பல்லக்குத் துண்டுகளை விலக்கிப் பார்த்தார்கள்.
அங்கே யாரும் இல்லை.
இல்லை? அவர்கள் தப்பிப் போயிருக்க முடியாது.
சிலர் புதா மறைவில் இருக்கிறார்கள்.
அவர்களை அப்படியே பிடித்து சிறைப்படுத்துங்கள். மன்னர் முன் கொண்டு செல்வோம்.
யாரடா? மரத்தின் மேல்? கீழே இறங்கு!


கொள்ளைக்காரர்கள் எல்லோரும் பிடிபட்டனர். ஒருவரோடு ஒருவராகக் கட்டி அவர்களை அரண்மனைக்கு இழுத்துச் சென்றனர்.


வீரர்களும், கொள்ளைக்காரர்களும் அரண்மனைத் தலைவாசலை அடைந்தார்கள்.


கொள்ளைக்காரர்கள் பிடிபட்டார்களென மன்னரிடம் தெரிவியுங்கள். மன்னரைக் காண வந்துள்ளேன்.


காவல் வீரர்கள் உள்ளே போனபோது மன்னன் சேனாதிபதியுடன் பேசிக் கொண்டிருந்தான்.
அப்படியா! மிக்க மகிழ்ச்சி. அவனை உள்ளே வரச்சொல்!


மன்னர் தங்களை உள்ளே வரச் சொன்னார்.


அவர்களை எல்லாம் சிறையில் அடையுங்கள். அவர்களின் தலைவன் யார்? அவனைத் தூக்கிலிடுங்கள்.
அவர்களது தலைவன் யாரென்று எனக்குத் தெரியாது. ஆனால் இங்கு நடப்பதை எல்லாம் யாரோ ஒருவன் அவர்களுக்குத் தெரிவிக்கிறான். இங்குள்ள அவனைப் பிடிக்க ஒரு வழி செய்திருக்கிறேன்.


கொள்ளைக்காரர்களை சிறைச்சாலைக்குக் கொண்டு சென்றார்கள். அவர்களில் ஒருவனை ஆதித்தன் அடையாளம் கண்டுகொண்டான்.


வீரபத்திரா...!
ஆமாம். இப்போது நீ எங்களைப் பிடித்துவிட்டாய். ஆனால் நீ சந்திரபுரி மக்களுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டாய்.
(தொடரும்)



# ஏன் வீண் செலவு?

குமாரசாமியின் சிறிய குடும்பத்தில் அவனது மனைவி வள்ளி, மகன் வேலன், மகள் தேவி என்பவர்களே இருந்தனர். வேலன் பட்டணத்தில் இருந்து படித்துக் கொண்டிருந்தான். தேவி திருமண வயதை எட்டி விட்டாள். வள்ளிக்கோ, தன் மகளின் திருமணம் பற்றிய கவலையே இருந்தது. அதற்காக இப்போதிலிருந்தே பணம் சேர்க்க வேண்டுமென அவள் எண்ணினாள்.

குமாரசாமியின் வயல்கள் பக்கத்து கிராமத்தில் இருந்தன. அவற்றைக் குத்தகைக்கு எடுத்த காளிமுத்து வருடா வருடம் குத்தகைப் பணத்தைக் கொடுத்து வந்தான். அவன் சொன்ன சொல் தவறாதவன். ஒரு நாள் அவன் திடீரென எதிர்பாராது வந்து நிற்கவே, குமாரசாமி, ''என்ன காளிமுத்து...! என்ன விஷயம்? எதிர்பாராமல் வந்திருக்கிறாயே?'' என்று கேட்டான்.

காளிமுத்துவும் ''ஐயா...! என் மகளின் கல்யாணம் நிச்சயமாகி விட்டது. இன்னும் பனிரெண்டு நாட்களே கல்யாணத்திற்கு இருக்கின்றன. அவளுக்கு ஒரு தங்கச் சங்கிலி செய்து போடுவதாகக் கூறிவிட்டேன். அதற்கு இரண்டாயிரம் ரூபாய் தேவைப்படுகிறது. அதை நீங்கள் தான் கொடுத்து உதவ வேண்டும். இன்னும் இரண்டு மாதத்தில் உங்கள் குத்தகைப் பணம் கொடுக்கும் போது இந்தப் பணத்தையும் சேர்த்துக் கொடுத்து விடுகிறேன். உங்கள் பதிலைத் தெரிந்து கொண்டு, சங்கிலி செய்யச் சொல்வதற்கு நகைக் கடைக்குப் போக வேண்டும்'', என்றான்.

குமாரசாமியும் ஒரு கணம் யோசித்து விட்டு, ''காளிமுத்து...!

– சுதா கிருஷ்ணசாமி –



கவலைப்படாதே...! நாளைக்குக் காலையில் வந்து பணத்தை வாங்கிக் கொள்!'' என்று சொல்லவே, காளி முத்துவும் அகமகிழ்ந்தவாறே சென் றான். அவன் சென்ற பின், உள்ளே சென்ற குமாரசாமியை அவன் மனைவி பார்த்து, ''காளிமுத்து விற்குப் பணம் கொடுக்க வேண்டியது தான். ஆனால், சற்று முன் கையில் நூறு ரூபாய் தான் இருப்பதாகச் சொன் னீர்கள். இப்போது இரண்டாயிரத் திற்கு எங்கே போவீர்கள்? காளி முத்துவிற்கு வேறு வாக்குக் கொடுத்து விட்டீர்களே...!'', என்று கேட்டாள்.

குமாரசாமியும், ''காளிமுத்து பணம் கேட்பது இது தான் முதல் தடவை. அவன் சொன்னால் வாக்குத் தவற மாட்டான். அதனால், நம் அருணாசலத்திடமிருந்து கடன் வாங் கிக் கொடுக்கலாம் என்று எண்ணி இருக்கிறேன். நேற்று யாரோ அவ னுக்கு இருபதாயிரம் கொடுத்து விட்டுப் போனார்களாம். அவனிடம் பணம் இருக்கும். நான் கேட்டால் கண்டிப்பாகக் கொடுப்பான்'', என் றான். அப்போது வள்ளி, ''கேட்பதை ஐயாயிரமாகக் கேளுங்கள். காளிமுத்து விற்கு இரண்டாயிரத்தை கொடுத்து விடலாம். மீதம் மூவாயிரத்தில் எனக்கு ஒரு மோதிரமும், தேவிக்கு ஒரு பட்டுப்புடவையும், வேலனுக்கு நல்ல பேண்டும், சட்டையும் வாங்கி விடலாம். இரண்டு மாதமானதும் குத்தகைப் பணத்தோடு, காளிமுத்து தான் வாங்கிய கடன் தொகையையும் தந்து விடுவானே...! அப்போது ஐயா யிரத்தையும் அருணாசலத்திற்குக் கொடுத்து விடலாம்'', என்றாள்.

குமாரசாமியும் சரியெனக் கூறிவிட்டு, அப்போதே அருணா

சலத்தின் வீட்டிற்குச் சென்றான்.

அங்கே ஏழெட்டுப் பேர் இருப்பதையும், அருணாசலத்திற்கு திடீரெனப் பணம் வந்திருப்பதையும் கேட்டு, அவர்கள் அவனிடம் கடன் கேட்க வந்திருக்கிறார்கள் என்று அவர்கள் பேசிக் கொண்டதிலிருந்து குமாரசாமி தெரிந்து கொண்டான். அவன் அவர்களிடமிருந்து சற்றுத் தள்ளி உட்கார்ந்து கொண்டான். அருணாசலம் தன் வீட்டின் வெளியே பலர் வந்து உட்கார்ந்திருப்பதைக் கண்டதும், அவர்களெல்லாம் எதற்காக வந்திருக்கிறார்கள் என்று புரிந்து கொண்டுவிட்டான்.

அவன் எல்லோரையும் பார்த்து, ''பணம் சம்பாதிப்பதும் மிகவும் கடினம். அப்படி சம்பாதித்த பணத்தை வீண் செலவாகச் செய்வது மிகச் சுலபம். அதனால் நேற்று எனக்கு கிடைத்த பணத்தை நம்மூர் நவகோடி நாராயணணிடம் கொடுத்திருக்கிறேன். அவர் எனக்கு வருடத்திற்கு நூற்றுக்குப் பதிமூன்று ரூபாய் வீதம் வட்டி கொடுப்பதாகக் கூறி இருக்கிறார். நான் அந்தத் தொகையை ஈடாக வைத்து அவரிடம் கடன் வாங்கினால், அவருக்கு நூற்றுக்குப் பதினைந்து ரூபாயாக வட்டி நானே செலுத்த வேண்டும்'', என்றான்.

அதைக்கேட்டு, அங்கு வந்தவர்களெல்லாம் ஒவ்வொருவராக எழுந்து சென்று விட்டனர். அப்போது ஓர் ஓரமாக உட்கார்ந்திருந்த குமாரசாமியைப் பார்த்து விட்ட அருணாசலம், அவனருகே போய், ''வா ! வா !! ஏன் இங்கேயே உட்கார்ந்து விட்டாய்? வீட்டிற்குள் தாராளமாக வந்திருக்கலாமே...! நானும், நீயும் இன்றைய நண்பர்களா? சிறுவயதிலிருந்தே ஆருயிர் நண்பர்களாயிற்றே...!'', என்று கூறித்



தன் வீட்டிற்குள் அழைத்துச் சென்றான்.

உள்ளே போனதும், அருணாசலம், ''என்ன சமாசாரம்? ஏதாவது பணம் வேண்டுமா? இப்போதே நவகோடி நாராயணனிடம் போய் கடன் கேட்டு வாங்கித் தருகிறேன். நூற்றுக்குப் பதினைந்து ரூபாய் தான் வருட வட்டி. எவ்வளவு வேண்டும்?'', என்று கேட்டான்.

வட்டி விகிதம் அதிகம் என்று அறிந்ததும், குமாரசாமி தனக்கு மிக மிக அவசியமான இரண்டாயிரம் ரூபாய் மட்டும் அருணாசலத்திடம் கேட்டான்.

உடனே அருணாசலம் நவகோடி நாராயணனிடமிருந்து இரண்டாயிரம் ரூபாய் கடனாக வாங்கி வந்து, குமாரசாமியிடம் கொடுக்க, அவனும் அதனை மறுநாள் காளிமுத்துவிடம் கொடுத்தான்.

இரண்டு மாதங்களுக்குப் பின், காளிமுத்து குத்தகைப் பணத்துடன் தான் கடனாகப் பெற்ற இரண்டாயிரம் ரூபாயையும் குமாரசாமியிடம் கொடுத்தான். குமாரசாமியும் அந்த இரண்டாயிரத்துடன், இரண்டு மாதங்களுக்கான வட்டியையும் சேர்த்து, அருணாசலத்திடம் கொடுத்தான்.

அருணாசலமோ, இரண்டாயிரம் ரூபாயை மட்டும் எடுத்துக் கொண்டு, வட்டிப் பணத்தைத் திருப்பிக் கொடுத்தவாறே, ''ஆருயிர் நண்பனிடம் நான் வட்டி வாங்குவேனா? கூடாது. வட்டி அதிகம் என்றதால் தான், நீ உனக்கு எவ்வளவு வேண்டி இருந்ததோ அவ்வளவு பணத்தை வாங்கிக் கொண்டாய். நண்பன் என்று தாட்சணியம் காட்டி, நான் உனக்குப் பணம் கொடுப்பதாகக் கூறி இருந்தால், நீ இன்னமும் அதிகப்பணத்தை கடனாக வாங்கிக் கொண்டு போய், வீண் செலவு செய்திருப்பாய்'', என்றான்.

குமாரசாமியும், ''நீ சொன்னது சரியே! இப்படி நீ செய்திரா விட்டால் நான் ஐயாயிரம் ரூபாயைக் கேட்டு வாங்கி, மூவாயிரம் ரூபாயில் இப்போதைக்கு அவசியமில்லாத செலவுகளைச் செய்திருப்பேன்'', எனக் கூறித் தலை குனிந்தான்.






# மன்னனின் பிரச்சினை!

ஒரு நாட்டு அரசன் பெரும் புத்திசாலி அல்ல. ஒரு நாள் மகாதேவர் என்ற பண்டிதர் அவனிடம் வந்து புராணக் கதைகளைக் கூறினார். அப்போது அவர், பூலோக வாசிகள் இறந்த பின் எமதர்மன் அவர்களைக் கொண்டு போய், சிலரை சொர்க்கத் திற்கும், மற்றவர்களை நரகத்திற்கும் அனுப்பி சித்திரவதை செய்வதாகக் கூறினார்.

அதைக் கேட்ட மன்னன், ''பண்டிதரே...! நாம் பூலோகத்தைப் பார்க்கிறோம், ஆகாயத்தைப் பார்க்கி றோம். இந்த சொர்க்க லோகமும், நரக லோகமும் இருந்து அவற்றிற்கு மனிதர்கள் செல்வதாகக் கூறினீர்களே! அதைக் காட்டுங்கள்'' என்றான்.

பண்டிதர் திகைத்துப்போனார். இதற்கு மன்னன் திருப்தி படும்படி பதில் கூறாவிட்டால், அவன் தன்னை தண்டித்து விடுவானென்று அவர் பயந்தார். அதனால் அவர், ''இது சிக்க லான பிரச்சனை. இதற்கு விடை கூற பல தர்ம சாஸ்திரங்களை நான் படித்த பிறகே கூற முடியும். அதனால் எனக்கு கொஞ்சம் அவகாசம் கொடுங்கள்'', என்று கூறி அப்போது தப்பித்துக் கொண்டார். பிறகு அன்றிரவே தலை நகரிலிருந்து கிளம்பித் தன் கிராமத் திற்கு அவர் ஓடியே போய் விட்டார்.

பண்டிதர் பதில் சொல்லாமல் பயந்து ஓடிவிட்டார் என்று அறிந்து கொண்ட மன்னன், அன்று முதல் தன் பிரச்சினையை எல்லோரிடமும் கூறி, அதற்கு விடை என்ன என்று கேட்டு வரலானான். ஆனால், யாராலும் அவ னுக்கு விடை கூற முடியவில்லை.

பண்டிதர் மகாதேவருக்கு, 'உதவாக்கரை' என்று பெயர் பெற்று விட்ட உலகநாதன் என்ற மகன் இருந் தான். அவனை தினமும் அவனது தாயார் கடிந்து கொள்வது வழக்கம். ஒரு நாள், அவள் மாவரைக்கும் எந்திரக் கல்லில் அரிசியைப் போட்டு அரைத்தவாறே, ''உலகா...! இப்படி எதற்கும் உதவாதபடி இருக்கிறாயே!



மன்னனின் பிரச்சினைக்கு பதில் என்று நீ எதையாவது சொல்லி பரிசு வாங்கி வரக்கூடாதா?'', என்றாள். உலகநாதனும் தன் தாயிடமிருந்து மன்னனின் பிரச்சினை என்ன என்று தெரிந்து கொண்டு, அவன் மாவு அறைக்கும் எந்திரக் கல்லைப் பார்த்த வாறே யோசித்தான்.

அவன் சட்டெனத் தன் தாயா ரிடம், ''எனக்கு அப்பிரச்சினைக்கு விடை தெரிந்து விட்டது. நான் அதை மன்னனிடம் கூறிப் பரிசு பெற்று வருகிறேன்'', என்று கூறிவிட்டுத் தலைநகருக்குச் சென்றான். அங்கு அவன் அரண்மனைக்குப் போய் வாயில் காப்போனிடம், ''நான் மன் னரைப் பார்க்க வேண்டும்'' என்றான். அவனோ, ''உன்னையெல்லாம் மன் னர் பார்க்க மாட்டார். அழுக்கு வேட்டி, கலைந்த தலைமயிர். பார்த் தால் பிச்சைக்காரன் போலிருக் கிறாயே!'', என்றான்.

உலகநாதனும் ''நான் ஒரு பண்டித ரின் மகன். மன்னனின் பிரச்சினைக்கு விடை கூற என் கிராமத்திலிருந்து வந்திருக்கிறேன்'' எனவே, வாயில் காப்போனும் ''அப்படியா! சரி. நீ போய் மன்னனைப் பார்'' என்று கூறி அவனை அரண்மனைக்குள் அனுப் பினான்.

மன்னன் உலகநாதனைப் பார்த்து 'களுக்' கென்று சிரித்து, ''நீயா என் பிரச்சினைக்கு விடை சொல்லப் போகிறாய்? உன்னைப் பார்த்தால் எதுவும் படித்தவன் மாதிரித் தோன்ற வில்லையே!'' என்றான். மன்னனும்

தர்பாரைக் கூட்டி எல்லோருக்கும் கேட்கும் படியாக தன் பிரச்சினைக்கு விடை கூறுமாறு சொன்னான்.

உலகநாதனும் தர்பாரில், ''நான் வாய் வார்த்தைகளால் சொன்னால் உங்களுக்கு விளங்காது. இதற்கு செய் முறை உள்ளது. அதைச் செய்து காட்டுகிறேன். அதற்கு ஒரு எந்திரக் கல்லைக் கொண்டு வரச்சொல் லுங்கள்'' என்றான். மன்னனும் ஒரு எந்திரக் கல்லைக் கொண்டு வரும் படிக் கட்டளை இட்டான். அதுவும் கொண்டு வரப்பட்டது.

உலகநாதன் அப்போது, ''இந்த எந்திரக்கல்லின் மேல் கல் தான் ஆகாயம், அடிக்கல் தான் பூலோகம். இதில் போடப்பட்ட அரிசி தான் உலகிலுள்ள மனிதர்கள். அரிசியை எடுத்து இக்கல்லினுள் போடுபவர் தான் கடவுள். எந்திரக்கல்லில் மேல் கல்லைச் சுற்றினான். பிறகு மேல் கல்லை எடுத்து, ''பாவிகள் நசுங்கி மாவாகி விழுந்து விட்டார்கள். மீதம் அரைபடாமல் கல்லின் மேலுள்ள அரிசி தான் சொர்க்க லோகத்திற்குப் போகும் மனிதர்கள். இவற்றிற்கு எம பயம் கிடையாது'' என்று கூறினான். அதைக் கேட்ட மன்னன் மகிழ்ந்து போய், ''ஆகா...! என் பிரச்சினைக்கு விளக்கமாக நீ விடை கூறிவிட்டாய்! நீ பண்டிதரின் மகன் என்றாயே...! யார் உன்னுடைய தந்தை?'' என்று கேட்டான்.

உலகநாதன், ''என் தந்தை பண்டி தர் மகாதேவர். அவரிடம் தான் முத லில் நீங்கள் உங்கள் பிரச்சனையைக் கூறினீர்கள்'' என்றான். மன்னனும் ''ஓ...! நீ அவர் மகனா? புலிக்குப் பிறந்தது பூனையாகி விடுமா என்ன?'' என்று கூறி அவனைப் பாராட்டி பரிசுகளை அளித்து கௌரவித்து அனுப்பினான்.

ஊருக்கு வந்த உலகநாதனும் முன் போல ஊர் சுற்றிக் கொண்டிராமல் சாஸ்திரங்களைக் கற்று, தந்தை போல பண்டிதராகி விட்டான்.





வாக்கியங்களை எழுதுங்கள்

# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களை போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/–
போட்டி முடிவு மே 2001 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.



பரிசு பெற்ற வாக்கியங்கள்





தன்னை உருக்கி வெளிச்சம் தரும்
எண்ணெய் உறிஞ்சி வெளிச்சம் தரும்

வாழ்த்துக்கள்

ஜனவரி 2001 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

**எம். பருக் பாஷா,**
நாராயணபுரம்,
வாணியம்பாடி – 632 101,
வேலூர் மாவட்டம்.

அம்புலிமாமா வருட சந்தா :
இந்தியாவில் ரூ.120/–

Payment in favour of CHANDAMAMA INDIA LIMITED. For details address your enquires to:
New 82 (old 92), Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097.

AMBULIMAMA (Tamil) MARCH 2001 Registrar of Newspapers India RN1095/57

# Honey all the way.

**Healthy every way.**

**JUMBO size**

nutrine

# Honeyfab

Lot more natural honey to taste longer



BREEZE R&M/NCCL/161/2000




India's largest selling sweets and toffees.